

**ஏகம் லோகஸ்ய சக்ஷுர் த்விவிதமபநுதத் கர்ம நம்ரத்ரிநேத்ரம்**

**தாத்ரர்த்தாநாம் சதுர்ணாம் கமயதரிகணம் பஞ்சதாம் ஷட்குணாட்யம்,**

**ஸப்தார்ச்சிச் சோஷிதாஷ்டாபதநவகிரணச்ரேணிரஜ்யத்தசாசம்**

**பர்யஸ்யாத் வச் சதாங்காவயவபரிப்ருடஜ்யோதிரீதிஸ ஸஹஸ்ரம்**

***— ஸ்ரீகூரநாராயண ஜீயரின் ஸ்ரீ ஸுதர்சந சதகம்-10***

உலகத்துக்கு முக்யமான கண் போன்றதும், புண்ய பாபரூபமான இருவகைக் கருமங்களையும் போக்கடிப்பதும், முக்கண்ணனான சிவபிரான் வணங்கப் பெற்றதும், நான்கு புருஷார்த்தங்களையும் அளிப்பதும், பகைவர் கூட்டங்களை நாசமடைவிப்பதும், ஞானம், சக்தி போன்ற ஆறுகுணங்கள் நிரம்பப் பெற்றதும், நெருப்பில் காய்ச்சப்பட்ட பொன் போன்ற புதிய கிரண் சேர்க்கையால் சிவக்கின்ற பத்துத் திசைகளையுடையதுமான ஸ்ரீ சுதர்ஸன ஜோதியானது உங்களுடைய பலபல துன்பங்களையெல்லாம் தொலைத்தருள்க.

# ஸப்தகிரி

ஜூலை - 1990

தனிப்பிரதி ரூ. 1 — மலர் 21

வருடச் சந்தா ரூ. 12 — இதழ் 2


## உள்ளுறை



---

### அட்டைப்பட விளக்கம்

முன்னட்டை : ஆனிவார ஆஸ்தானம்—திருமலை.

முதல் உள்அட்டை : பெங்களூர் மற்றும் திருப்பதியில் நடை பெற்ற அனனம்மயயாவின் ஜயந்தி விழா காட்சிகள்.

2-வது உள்அட்டை : திருமலையில் ஆந்திர மாநில ஆளுநர் திரு. கிருஷ்ணகாந்த் அவர்கள்.

பின்னட்டை . ஸ்ரீ தக்ஷிணாமூர்ததி சிற்பம்.


சிறபபாசிரியர் .
திரு. எம். வி. எஸ். பிரஸாத், I.A S.,
செயலாட்சித் தலைவர்,
தி.தி.தேவஸ்தானம, திருபபதி.

அச்சிடுபவர்
திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி.தி. தேவஸ்தான அசசகம்,
திருப்பதி.

ஆசிரியர்
திரு. கே. சுப்பாராவ், எம்.ஏ.

துணையாசிரியர்:
திரு. என். எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

பிரதிகளுக்கு:
EDITOR,
“ Sapthagiri ”
T. T. Devasthanams,
TIRUPATI.




# உங்களுடன் . . . .

''எண்ணும் எழுத்தும் கண்ணெனத் தகும்''. அத்தகு கண்களை நாம் நம் வாழ்க்கையில் பெற வழிகாட்டுபவர் 'குரு' 'ஆசார்யர்' 'ஆசிரியர்' எனப்படுவோரே ஆவர். 'குரோர் ஏனுக்கிரக தேவ: புமான் பூர்ணக: பிரஜாயதே'' என்றவாறு குருவின் துணையால்தான் மனிதன் முழுமை பெறுகின்றான். குரு கொடுப்பதை ஈசனும் கொடான் என்பர். ஆகையால்தான் ''ஆசார்ய தேவோ பவ'' என்று ஆசிரியரினை இறைவனுக்கு நிகராக வைத்துப் பெருமை செய்தனர். அத்தகு குருவின் இடத்தைச் சிறப்பிப்பவர் வியாசமுனிவராவார். பரப்பிரம்மத்தினை-பரம்பொருளினை ஏத்திப் பேசிடும் வேத, வேதாந்த பக்தி சூத்திரங்களை வியாசர் எழுத ஆரம்பித்த அந்நன்னாளே 'குரு பூர்ணிமை' என்றழைக்கப்படுகிறது. கண்ணன் கீதையில் ''ரிஷிகளில் நான் வியாசராக இருக்கிறேன்'' என்றுகூறிப் பெருமை செய்த வியாசரின் நினைவாலேயே இக்'குரு பூர்ணிமை' 'வியாச பூர்ணிமை'யாகக் கொண்டாடப்படுகிறது.

குருவின் அவசியத்தையும், அவர்தம் சிறப்பினையும் உலகுக்கு எடுத்துக்காட்டவே இறைவனின் அவதாரங்களான கிருஷ்ணன் சாந்தீபினியையும், இராமன வசிட்டரையும் தங்கள் குருவாகக் கொண்டனர். முக்கண்ணனும் பிரணவத்தின் பொருள் அறிய குகனையே தன் குருவாகக் கொண்டான். முப்பெரும் தத்துவக் கோட்பாடுகளைப் படைத்து இம்மண்ணின ஆன்மீகப் பெருமையை ஞாலத்திற்கு உணர்த்திட்ட சங்கரரும், உடையவரும், மத்தவரும் தங்கள் வாழ்க்கையில் தங்களுக்கெனக் குருக்களைத் தேடிக் கொண்டனர். ஸ்ரீராக வேந்திரர் சசீந்திரர் உறவின்மூலம் மாணவனே குருவான விந்தையினையும், யாக்ஞவல்க்கியர்-மைத்ரேயி உறவின் மூலம் கணவனே குருவான நிகழ்ச்சியினையும், துளசிதாஸர்-மமதா ஆன்மீக உறவின்மூலம் மனைவியே குருவான அதிசயத்தையும் அறியும்போது குருவின் பெருமையும் சிறப்பும் இடத்தைப் பொறுத்து அமையாது, தகுதி கொண்டே விளங்கும் என்பதை அறிய முடிகிறது. தந்தை ஞானம் மிகுந்து திகழ்ந்தாலும், தம் பிள்ளைகளைத் தகுந்த குருவிடமே கல்வி பயல அனுப்பி வைத்துள்ளனர் என்பதை நமது இதிஹாஸ, புராணங்கள் காட்டுவது குருவின் ஏற்றத்தை நாம் அறியவேயாகும்.

மனிதன் பெறும் துன்பம் அவன் பிறப்பால் விளைகின்றது, பிறப்பானது அவனது கர்ம வசத்தினால் தொடர்கின்றது. கர்மங்கள் அவன் மேற்கொள்ளும் நல்வினை, தீவினைகளால் ஏற்படுகின்றன. வினைகள் அவன் அறியாமையால் நடைபெறுகின்றன. இந்த அறியாமை எனும் பேரிருள் விலக வேண்டுமென்றால், அவனுள் பேரின்பப் பேரொளி ஒளி வீசிட வேண்டும். அவ்ஒளியினை ஒளிரச் செய்யும் சிறு விளக்காக 'குரு' அமைகின்றார். கட்புலனுக்குத் தெரியாத கடவுளைக் கண்டறிய எவ்வாறு ஒரு சாதாரண பக்தனுக்கு இறைவனின் திருவுருவம் பயன்படுகிறதோ-வழிகாட்டுகின்றதோ-அவனுள் நம்பிக்கையினை ஏற்படுத்துகின்றதோ-அதுபோல மனித அறிவுக்கு ஆட்படாத அப்பேரறிவினை அறிந்து கொள்ள நம்முன் இருந்து நமக்கு வழிகாட்ட-அறிவுறுத்திட 'குரு' எனும் ஒரு வழிகாட்டி தேவை. ஆசையில்லாத, தன்னலமற்ற, தவறு செய்யாத, இரக்கமுள்ள, ஆன்ம அறிவு நிரம்பிய ஒருவரே உண்மையான குருவாவார். அத்தகு குருவின் கடைக்கண் பார்வை ஒன்றே-சொல் ஒன்றே-ஸ்பர்சம் ஒன்றே போதும் கடையினையும் கடைத்தேற்றிவிடும் அதிசயம் அங்கு நிகழ்ந்துவிடும். மனிதன் இம்மண்ணில் வாழ்வதில் தந்தைக்குக் கடமைப்பட்டுள்ளான், அவனே முறையாக வாழ்வதில் குருவுக்குக் கடமைப்படுகிறான். குருவின் திறமை புதியதை அறிந்ததாகச் சொல்வதிலும், அறிந்ததைப் புதியது புதியதாக விளங்க வைப்பதிலும்தான் அடங்கியுள்ளது.

இத்தகு குருவின் பெருமை அவர் காட்டும் வழியில் அமையும்போது, சிஷ்யனெனும் மாணவனின் சிறப்பு அவன் நடக்கும் வழியில திகழும். கற்றுத்தரும் ஆசிரியர்மீது மாணவனுக்கு இருக்கும் நம்பிக்கையும், நல்லுறவே நல்ல சமுதாயத்தை உருவாக்கும். சாணிக்யனுக்கும் சந்திரகுப்தனுக்கும் இடையே இருந்த உறவே ஓர் உயர்ந்தபேரரசினை உருவாக்கிய செய்தியினையும், அமாத்யராக்ஷஸனுக்கும் நந்தர்களுக்கும் இடையே அமைந்த தீய உறவால் அரசாட்சியே அழிந்த நிகழ்ச்சியினையும சரித்திரம் நமக்கு விளக்கிக்கூறும். ஞானம் பெற ஆசிரியர் மாணவர் இடையே இன, இட வேறுபாடுகள் தடைக்கற்களாக அமையா என்பதற்குக் கௌசிகன் தர்ம வியாதன் எனும் இறைச்சி விற்பவனிடம் காத்திருந்து உபதேசம் பெற்ற நிகழ்ச்சி உதாரணமாக அமையும். தன் மாணவன, எல்லாம் கற்றவனாக இருத்தல் வேண்டும் என்ற அவா குருவுக்கு இருத்தல் வேண்டும் என்பதை குலகுருவான வசிட்டன இராமனை விஸ்வாமித்ரனிடம் மேலும் கற்க அனுப்பினான். பிரகஸ்பதி தன் மாணவனான கசனை சுக்ராச்சாரியரிடம் அனுப்பினான். அதே போன்று கற்கும் மாணவனுக்குக் கற்கும் ஆர்வமும், தன் ஆசிரியனிடத்தில் தளரா நம்பிக்கையும் இருக்கவேணடும். இதற்கு துரோணரின் திருவுருவச் சிலையினையே குருவாகக் கொண்டு, அர்ச்சுனனே பொறாமை கொள்ளும அளவு, வில் பயற்சியில் தேர்ச்சி பெற்ற மாணவனான ஏகலைவன் சிறந்த உதாரணமாகத் திகழ்கின்றான். சரியான குரு அமையாவிட்டால் நல்ல சிஷ்யனும் கெடுவான் என்பதற்கு ஏகலைவன், கர்ணன் போன்றோரும், நல்ல குரு அமைந்தாலும் நல்ல சிஷ்யன் அமையாவிட்டால் குருவும் கெடுவர் எனபதற்கு பிரகஸ்பதி, துரோணர் ஆகியோரே சிறந்த எடுத்துக்காட்டுகளாவர்.

இந்து சமயம் போற்றிட்ட குரு-சிஷ்யன் பாரம்பர்யத்தின் இன்றைய நிலையெனன? கற்றதைக் காசாக்கிடத் துடித்திடும் பெரும்பான்மையான ஆசிரியர்களின் தரம் தாழ்ந்திடக் காரணமென்ன? கற்றதைக் காற்றினில் பறக்கவிட்டு, கற்கக் கூடாததைக் கற்கத் துடிதிதிடும பெரும்பான்மையான மாணவர்களின் நிலமை பரிதாபமானதேன்? அரைவேக்காடு அரசியல் அறிவும், சினிமா மோகமும், பெற்றோர்களின் கவனக்குறைவும் மாணவ சமுதாயத்தைத் தாக்கிடும் போது, தன்னம்பிக்கையற்ற, தன்னலமிக்க, சுய ஒழுக்கக் கட்டுப்பாடு இழந்திட்ட, பாட நூல் அறிவு குறைந்திட்ட, ஏழ்மை பரந்திட்ட சூழ்நிலை ஆசிரியர் சமுதாயத்தைத் தாக்கிடும்போது, கல்வியானது ஆசிரியர்களையும், மாணவர்களையும் வாழ வழிவகுக்கும் ஒரு பாதையாக அமைவதென்பது. பகற்கனவாகவே அமையும். இனியும் காலங்கடக்காமல், இப்போதாவது விழித்தெழுந்து பெற்றோர்களும், ஆசிரியர்களும், மாணவர்களும் பொறுப்புடன் நேர்மையுடன் சொல்லிலும், செயலிலும் சிறந்து விளங்குவார்களேயானால் அதுவே நாளை நம் நாடு ஒரு நல்ல மனித சமுதாயத்தை உருவாக்கிட வழி

# செய்திச் சுருக்கம்

**அன்னதான திட்டம் :**

திருமலையில் யாத்திரிகர்களுக்காக நாள்தோறும் இலவசமாக உணவு வழங்கிடும் வகையில் தி. தி. தேவஸ்தானம் துவக்கி வைத்துள்ள ஸ்ரீ வேங்கடேஸ்வரா நித்ய அன்னதான திட்டத்திற்’கென இதுவரை பொது மக்களிடமிருந்து ரூ. 4.41 கோடி சேர்ந்துள்ளது. இதற்குச் சமமாக தி. தி. தேவஸ்தானமும் தன் பங்காக ரூ. 4.41 கோடி செலுத்த, தற்போது இத்தொகை ரூ. 8.82 கோடியாக உயர்ந்துள்ளது. இதனால் ஆண்டுக்கொரு முறை பெறப்படும் இத்தொகையின் வட்டித் தொகையான ரூ. 85 இலட்சத்தினால் திருமலையில் நாள் தோறும் சுமார் 10,000 யாத்திரிகர்களுக்கு இலவச உணவு வழங்கப்படுகிறது. ஆனால் இப்பத்தாயிரம் யாத்திரிகர்களுக்கு (நாள் ஒன்றிற்கு) வருடம் முழுவதும் உணவு வழங்க மேலாண்மைக்கு ஆகும் செலவு ரூபாய் ஒரு கோடியாகும். விரைவில் இத்திட்டத்திற்கான வைப்பு நிதி ரூ. 10 கோடியினை மேலாண்மை பெற்றுவிடும் என்றே நம்புகிறோம்.

**பிரம்மோத்ஸவம் :**

திருப்பதி ஸ்ரீகோவிந்தராஜ சுவாமி கோயிலின் இவ்வருட பிரம்மோத்ஸவம் 30-[illegible]-90 முதல் ஒன்பது நாட்களுக்கு வெகு விமர்சையாகக் கொண்டாடப்பட்டது. 3-6-90 அன்று நடைபெற்ற கருட சேவையினையும், 6-6-90 அன்று நடைபெற்ற தேர்த் திருவிழாவினையும் காண உள்ளூர் மற்றும் வெளியூர்களைச் சார்ந்த யாத்திரிகப் பொதுமக்கள் ஆயிரக்கணக்கில் கூடியிருந்து இந்நிகழ்ச்சிகளில் கலந்து கொண்டது குறிப்பிடத்தக்க ஒன்றாகும்.

**கட்டண உயர்வு :**

திருப்பதியிலிருந்து திருமலைக்குச் செல்லும்படியான அரசு பேருந்துக் கட்டணம் ரூ. 4.75 லிருந்து ரூ. 5.50 ஆகவும், விரைவு பேருந்துக் கட்டணம் ரூ. 6 லிருந்து ரூ. 7 ஆகவும் அண்மையில் உயர்த்தப்பட்டுள்ளது.

**கோடை சமயப்பள்ளி :**

தி. தி. தேவஸ்தானத்தாரின் தர்ம பிரசார பரிஷத் ஆதரவில் கோடை சமயப் பயிற்சி பள்ளி ஒன்று 26-5-90 முதல் 6-6-90 வரை திருப்பதியில் நடைபெற்றது. இக்கோடைப்பள்ளியினை துவக்கி வைத்த தி. தி. தே. செயலாட்சித் தலைவர் தம் சிறப்புரையில் கிராமங்களில் சமய நிகழ்ச்சிகள் நடைபெற வேண்டியதன் அவசியத்தையும் இந்து சமயச் சடங்குகளில் ஒரு பொதுத் தன்மை இல்லாததையும், சமய அறிஞர்கள் ஒன்று கூடி பிரச்சனைக்குரிய சமயச் சடங்குகளைத் தவிர்த்திடும் வகையில் ஒரு பொதுச் சடங்கு முறையினை ஏற்படுத்த வேண்டியதன் அவசியத்தையும் குறிப்பிட்டார். இந்து சமய உணர்வினை இளைஞர்களிடையே பரப்ப வேண்டியதின் முக்கியத்துவத்தையும், அவசரத்தையும் வலியுறுத்திப் பேசினார்.

முன்னாள் தி. தி. தே. செயலாட்சித் தலைவர் திரு. சி. அண்ணாராவ், மக்கள் தொடர்பு அலுவலர் திரு. ஆர். சூரியநாராயண மூர்த்தி, தர்ம பிரசார பரிஷத் செயலர் டாக்டர். அப்பஜோடு வெங்கட சுப்பைய்யா ஆகியோரும் இந்நிகழ்ச்சியில் பங்கேற்று உரையாற்றினர்.

இச்சமயப் பள்ளியின் பிரிவு வாழ்த்துரை விழா 6-6-90 அன்று நடைபெற்றது. இவ்விழாவில், பங்கேற்று உரையாற்றிய பண்பாட்டுக் கழக இயக்குநரும் பல்கலைக் கழக உயர் கல்விக் குழுவின் தேசிய விரிவுரையாளருமான திரு. சி. வி. நரசிம்மா ரெட்டி அவர்கள் பேசுகையில் மேல் நாட்டார் நமது வேதங்கள், உபநிஷத்துக்கள், யோகம் மற்றும் வடமொழி பற்றி அதிகம் நாட்டம் கொண்டு விளங்கும்போது, இந்துக்

(48-ம் பக்கம் பார்க்க)

## 31-8-90ஆம் தேதியுடன் முடிவடையும் சந்தா எண்கள்

55 75 139 219 226 227 332 348 349 351 356 360 364 531 543 675 720 751 753 761 768 801 1091 1378 1463 1597 1603 1615 1749 1750 1770 1814 1851 1878 2134 2422 2495 2610 2682 2799 2888 3066 3072 3141 3149 3155 3161 3176 3195 3240 3246 3247 3255 3258 3266 3267 3268 3278 3294 3295 3297 3298 3299 3555 3931 4031 4052 4182 4211 4275 4300 4384 4389 4432 4440 4608 5491 5492 5714 5715 5717 முதல் 5720 5721 5722 5723 5726 5727 5728 5730 5731 முதல் 5792 5794 முதல் 5798 5801 முதல் 5804 5808 5812 முதல் 5815 5819 முதல் 5830 5832 முதல் 5849 5851 முதல் 5854 5856 முதல் 5869 5871 5882 5884 முதல் 5887 5889 முதல் 5892 5894 முதல் 5905 5907 முதல் 5919 5921 முதல் 5939 5941 முதல் 5942 5944 முதல் 5949 5951 5953 5954 5956 முதல் 5982 5987 முதல் 6008 6010 முதல் 6013 6052 6053

# ஸ்ரீ ஆண்டாள் திருக்கல்யாணம்



'ஸ்ரீவி[illegible] னுசித்த [illegible] நந்தன கல்பவல்லீ[illegible]' என்கிறபடியே, மிதிலையில் யாக பூமி[illegible] ஜனகபுத்திரி [illegible] தைப் போல, [illegible] விஷ்ணுசித்தர் புஷ்[illegible] துழாய் வனத்தில் பூதேவியானவள் கோதையாக அவதரித்தாள்.

ஸ்ரீவில்லிபுத்தூரில் உறையும் எம்பெருமான் வடபத்ர சாயிக்குப் பிரதி தினமும் திருமாலை கட்டிச் சாற்றும் கைங்கர்யம் செய்து கொண்டிருந்தார் விஷ்ணுசித்தர் என்ற பெரியாழ்வார்.

அவர் மாலைகளைக் கட்டிக் குடலையில் வைத்துவிட்டு வேறு சில கைங்கர்யார்த்தமாக வெளியே சென்றிருக்கும்பொழுது, கோதையானவள் அம்மாலைகளை எடுத்துத் தன் குழலிலே சூட்டிக் கொண்டு அழகு பார்த்துவிட்டுத் திரும்பவும்குடலைக் குள் வைப்பது வழக்கமாயிருந்தது.

ஒரு நாள் இதைப் பார்த்துவிட்ட பெரியாழ்வார்–'இது என்ன காரியம் செய்யத் துணிந்தாய்' என்று கோபத்துடன் கூறினார். கோதை கண்ணீர் பெருக நின்றாள்.

அவர் துக்காக்ராந்தராய் வேறு மாலைகள் கட்டிக் கோவிலுக்கு எடுத்துச் சென்றபொழுது, 'ஸ்ரீவடபத்ரசாயி'யானவர் அதை ஏற்றுக் கொள்ளாமல், "கோதை சூடிய மாலையே எனக்கு உகந்தது" என்று (அர்ச்சகமுகேந) தெரிவிக்க, "அவதார நாயகி என்று அறியாமல் கோதையைக் கடிந்துவிட்டோமே" என்று வருந்தினார்.

பிறகு அம்மாலைகளைக் கோதையின் குழலில் சாற்றி எடுத்துக் கொண்டு போக, வடபத்ரசாயியும், "தத்தேநதேந சிரஸா தவமௌலி மாலாம்" என்கிறபடியே, சிரஸினால் வாங்கி சந்தோஷமாகச் சாற்றிக் கொண்டார்.

அதனால்தான் கோதைக்கு 'சூடிக் கொடுத்த நாச்சியார்' என்ற பெயர் பிரசித்தமாயிற்று.

விஷ்ணுசித்தர் கோதைக்கு விவாஹம் செய்யவேணுமென்று நினைத்து 'இவளுக்குத் தகுந்த நாயகன் யாரோ' என்று சிந்திக்க, 'மானிடவர்க்கென்று பேச்சுப்படில் வாழகில்லேன்' என்று கோதை சொல்ல,

"இவள் மானிடப் பெண்ணாக அவதரித்திருக்க, எம்பெருமான் அர்ச்சாரூபியாய் இருக்க, எப்படி விவாஹம் செய்வது?" என்று கவலையுடனிருந்தார்.

---

திரு. ஆர். ஆண்டான்,
ஸ்ரீ வில்லிபுத்தூர்.

---

கோதையோ "ஜனகன் - க்ஷத்திரியனாகையால் சீதைக்கு 'வில்' என்று ஒரு வியாஜம் வைத்திருந்தான். கும்பர்-கோதனராகையால் நப்பின்னைப் பிராட்டிக்கு ஏழு வ்ருஷபத்தை வியாஜமாக வைத்தார். "'துல்யஸீல வயோவ்ருத்தாம்' என்கிறபடியே, இராமாவதாரம் செய்து, வில்லை முறித்து சீதையை விவாஹம் செய்து கொண்டான். 'கோட்டிடையான் கூற்று அடலாயர்

தம் கொம்பினுக்கே' என்கிறபடி, கிருஷ்ணாவதாரம் செய்து ஏழு வ்ரு ஷபத்தை நிரஸித்து, நப்பின்னைப் பிராட்டியைத் திருமணம் செய்து கொண்டான்.

என்னுடைய தகப்பனாரோ சாது வான பிராம்மண சிரேஷ்டராகை யால் ஒரு வியாஜமும் செய்ய வழி யில்லை. ஆகையால் எம்பெருமான் தானாகவே வந்து என்னை மணம் செய்து கொள்ள வேணுமென்று பிரார்த்தித்துக் கொண்டிருந்தாள்.

ஒரு நாள் கோதை, ஸ்ரீரங்கநாதன் கோபாலனாக வந்து தன்னை மணம் செய்து கொள்வதாகக் கனவு கண் டாள். தன் உற்ற தோழியான 'செண்பக மாலை' என்பவளை அழைத்துத் தான் கண்ட கனவை அவளிடம் கூறுகிறாள்.

"பூரண பொற்குடம் வைத்துத்... தோரணம் நாட்டக் கனாக் கண் டேன்" என்றும், "கோளரி மாதவன் கோவிந்தன் என்பான் ஓர் காளை புகுதக் கனாக் கண்டேன்" என்றும், கைத்தலம் 'மைத்துனன் நம்பி மதுசூதன் வந்தென்னை... பற்றக் கனாக கண்டேன்' என்றும், "அங்கு அவனோடு உடன் சென்றங் கானைமேல் மஞ்சன மாட்டக் கனாக் கண்டேன்" என்றும் சொன்னாள்.

தோழியானவள் "அவர் ஊர், பெயர், குலம், கோத்திரம் என்ன" என கேட்கிறாள். "யாரென்று நான் அறியேன்; ஆனால் அவரன்றி இனி என்னால் தரிக்க முடியாது. நீ தேடிச் சென்று அவரை அழைதது வா" என்று கண்ணீரும் கம்பலை யுமாகக் கூறினாள் கோதை.

செண்பக மாலை தானும் மற்றத் தோழிகளுமாக திசைக்கு ஒருவராகச் சென்று நூற்றெட்டு திவ்ய தேசத் திலும் எழுந்தருளியிருக்கும் எம்பெரு மான் உருவங்களை சித்திரமாக எழுதிக் கொண்டு வந்தார்கள்.



திருமழிசைக் கோயில்
புகைப்படம்: கமலா மாரியப்பன்-கோவை

கோதையும் ஒவ்வொன்றாகப் பார்த்துவிட்டு, 'இவர் அன்று, இவர் அன்று' என்று ஒதுக்கினாள். திரு வேங்கடத்தில் குடிகொண்ட ஸ்ரீநிவா சனையும், திருமாலிருஞ்சோலையில் வதியும் சுந்தரராஜனையும், திரு தண்காலில் உள்ள அப்பனையும், வில்லிபுத்தூர் உறைவான் வடபத்திர சாயியையும் கண்ட பொழுது "இந் நால்வருக்கும் நான் கண்ட பெரு மானின் சாயல் உள்ளது. ஆனால் இவர் அவரில்லை' என்றாள்.

கடைசியில் பூலோக வைகுண்ட மான ஸ்ரீரங்கத்தில் பள்ளிகொண்ட ஸ்ரீரெங்கநாதன் உருவத்தைக் கண்ட தும் துள்ளி எழுந்தாள். "ஆறிரண் டும் காவேரி, அதன் நடுவே ஸ்ரீரங்கம். ஸ்ரீரெங்கநாதனே செந்தாமரைக் கண்ணன். இவரே என் நாயகர்" என்று ஆனந்தக் கூத்தாடினாள்.

இவருடைய குதூகலம் தோழிக்கு வேதனையளித்தது. "இவர் சிலை யாகவன்றோ இருக்கிறார். இவர் எப்படி வந்து கோதையைக் கல் யாணம் செய்து கொள்ள முடியும்?" என்று வருந்தினாள்.

ஆனால் கோதையோ 'என் மணா ளன் இருப்பிடம் தெரிந்து விட்டது.



ஓம் ஸ்ரீ மாத்ரே நம:

# பொதுமக்களுக்கு ஓர் அரிய நற்செய்தி



**ஸ்ரீ காஞ்சி ஜகத்குரு ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள், திருமுருக கிருபானந்தவாரியார் மற்றும் பல மகான்கள் ஆசி வழங்கிய நவசக்தி நிலையத்தாரால் உருவாக்கப்படும் பூஜைக்கு உரிய தெய்வீக சாதனங்கள்.**

| வ.எண். | யந்திரங்களின் பெயரும் அதன் பலன்களும் | விலை ரூ.பை. |
|---|---|---|
| 1. | பூர்ண ஸ்ரீ சக்கர மகாமேரு பஞ்சலோகம் அனைத்துத் தெய்வங்களும் இதில் அடங்கியது (மர பீடம் உட்பட) 6½×6½ செ.மீ. ரூ. 750/- 5×5 செ.மீ. | 450-00 |
| 2. | ஸ்ரீ மகா கணபதி 8×8 செ. மீ. எநதக் காரியமும் தடையின்றி நடக்க | 130-00 |
| 3. | ஸ்ரீ சக்கரம் 8×8செ.மீ. அனைத்து தெய்வங்களும் இதில் அடங்கியது | 130-00 |
| 4. | ஸ்ரீ மகாலட்சுமி மகாயந்திரம் 24×24 செ. மீ. 300 ஆண்டுகளுக்கு லட்சுமி கடாட்சத்தை ஏற்படுததி நிலைத்திருக்கச் செய்யும் (கோல்ட் பிரேம்) | 1150-00 |
| 5. | சர்வ ஜன மன தன ஆகர்ஷணம் ஸ்ரீ சாம்ராஜ்யலட்சுமி ஸ்ரீ மகா சுதர்சனம் 16×48 செ. மீ. (கோல்டு பிரேம்) (மூன்று யநதிரங்கள் சேர்த்து) வியாபாரத்தில் விருத்தியடையவும் லட்சுமி கடாட்சம், பண வரவுக்கும்,எதிரிகள் பொறாமை இவைகளை நீக்கி சுபிட்சத்தைஉண்டுபண்ணும் | 1750-00 |
| 6. | சர்வ ஜன மன தன ஆகர்ஷணம் சாம்ராஜ்ய லட்சுமி ஸ்ரீ சுதர்சனம் 8×24 செ. மீ. (கோல்டு பிரேம) மேற்கண்ட பலனை தரவல்லது | 500-00 |
| 7. | சூலினி, சரபேஸ்வரர், ப்ரதியங்காரா 8×24 செ.மீ. (கோல்டு பிரேம்) | 500-00 |
| 8. | சூலினி, சரபேஸ்வரர், ப்ரதியங்காரா, 16×48 செ.மீ. (கோல்டு பிரேம்) மூன்று யந்திரங்கள் சேர்ந்தது வியாபாரததிலோ, வீட்டிலோ நவக்கிரக தோஷங்களை நீக்கி எதிரிகள் இல்லாமல் செய்யவும் பில்லி, சூனியம், ஏவல்களை நீக்கி, லட்சுமி கடாட்சம் தரவல்லது. | 1750-00 |
| 9. | ரசமணி ஒன்றின் விலை ரூ. 250/-, ரூ. 500/- இது மனதை ஒரு நிலைபடுத்தும், சர்வ காரிய சித்தியும் சுகபோக பாக்கியங்களையும் தரவல்லது. | |
| 10. | கண் திருஷ்டி ஒருபுறம். மறுபுறம் சுதர்சன டாலர். கண் திருஷ்டியால் ஏற்படும் தொல்லைகளை நீக்கி எதிரிகளிடமிருந்து பாதுகாக்க வல்லது. | 70-00 |
| 11. | ஸ்ரீ சக்கரம் ஒருபுறம், மறுபுறம் ஸ்ரீ காமாட்சி டாலர். அம்பாள் கடாட்சத்தை ஏற்படுத்திச் சிரமங்களை நீக்க வல்லது. | 70-00 |
| 12. | ஸ்ரீ காமட்சி ஒருபுறம், மறுபுறம் தனுகர்ஷண டாலர். அம்பாள் கடாட்சமும், பொருள் வரவும் தரவல்லது. | 70-00 |
| 13. | சௌடாம்பிகை மாங்கல்ய பாக்கிய டாலர். அம்பாள் கடாட்சமும், பெண்கள் தீர்க்க சுமங்கலியாக இருக்கவும், கணவனுக்கு அதிர்ஷ்டத்தை உண்டாக்கவும் வல்லது. | 70-00 |
| 14. | விவாகப்ராப்தி டாலர். தடைப்பட்டு வந்ததிருமணம் தடையின்றி நடக்கும் | 70-00 |
| 15. | ஸ்ரீ சக்கரம் லட்சுமி பீஜம் டாலர் அம்பாள் கடாட்சத்தை நிலைத்திருக்கச் செய்யவல்லது | 70-00 |
| 16. | கண் திருஷ்டி படம் (கோல்டு பிரேம்) வீட்டிலும் வியாபாரத்திலும் வைப்பதால் கண் திருஷ்டி தொல்லைகள நீக்கி விபத்துக்களைத் தடுத்துக் காப்பாற்ற வல்லது | 70-00 |
| 17. | தத்தாதரேயர் யந்தரம் 12×12 செ. மீ. (கோல்டு பிரேம்) கண் திருஷ்டி, பொறாமை, துர்தேவதைகளால் ஏற்படும் தொல்லைகளை நீக்கிக் காப்பாறற வல்லது | 150-00 |
| 18. | பூஜைக்கு உரிய பஞ்சாயதன செட்டும், பாணலிங்கம், ஸ்படிக லிங்ககம பலவிதமான மாலைகள் மாலைகள சுத்த வெள்ளியால் செயயப்பட்டவையும் இன்னும் பலவிதமான சாதனங்களும் கிடைக்கும் பூஜைக்குரிய பாதுகை இங்கு கிடைககும. | |

கோவிவில்களுக்கு வேண்டிய சகல யந்த்ரங்களும், கிராம தேவதைகளுக்குரிய சகல யந்தரங்களும் கிடைக்கும். ஒன்றின் விலை ரூ. 105/- ஸ்பெஷல்: கோவிலில் ஜன ஆகர்ஷணம், தன ஆகர்ஷணம் செய்யக்கூடிய யந்தரத்தில் விலை ரூ. 300/- வெளிநாட்டுக்கு 25% அதிகம். விலைப்பட்டியலுக்கு 0-50 பைசா தபால் தலையுடன் கீழ்க்கண்ட விலாசத்திற்கு விணணப்பிக்கவும். மேற்கண்ட யந்திரங்களின் பலன்களை ஒரளவுதான் பத்திரிகைகளில் தெரிவிக்க முடியும்.


ஸ்வாமிஜி ஸ்ரீ முருகபூஷணம்

ஸ்ரீ வித்யா உபாசகர், தலைவர் நவசக்தி நிலையம்,

153, லாயட்ஸ் ரோடு, (ஸ்டேட் பேங்க் எதிரில்), கோபாலபுரம், சென்னை - 600086.

**போன்: கடை ... 472013 மா மேரு டிரஸ்டு வீடு: ... 861254**


**" லோகாஸ் சமஸ்தாஸ் சுகினோ பவந்து "**

இனி ஒருக் கணமும் தாமதிக்க முடியாது. அவன் வராவிட்டால் நானே அவனிடம் செல்வேன். என்னை உடனே அழைத்துச் செல்' என்று மன்றாடினாள்.

தோழியும் வேறு வகையறியாது பல்லக்கைக் கொண்டு வந்து கோதையை அழைத்துச் சென்றாள். ஸ்ரீரங்கம் வந்ததும் காவிரியில் நீராட்டி, அவளை மணப்பெண் போல் அலங்கரித்தாள்.

பட்டுடுத்தி, திருவாபரணங்களைச் சாற்றி, பின்னலிட்டுப் பூச்சூட்டி, அழகிய கண்களுக்கு அஞ்சனம்திட்டி, சீரான திருநாமம் இட்டு பாங்காக அலங்கரித்துத் திருவரங்கன் கோயிலுக்கு அழைத்துச் சென்றாள்.

முன்னாக நடந்து சென்ற கோதை பல மண்டபங்களையும் கடந்து கர்ப்பக்ரஹத்தினுள் சென்றாள். உடன் வந்த தோழி தடைப்பட்டு நிற்க, பாம்பணையின் மேலேறி அரங்கனின் திருவடியில் பணிந்தாள். பிறகு கோதையைக் காணவில்லை. அவள் அரங்கனின் திருமேனியில் ஐக்கியமடைந்து விட்டாள்.

கோதை சென்றுவிட்ட சேதியறிந்த பெரியாழ்வார் கதறிக் கொண்டு ஓடி வந்தார். "ஒரு மகள் தன்னை உடையேன், உலகம் நிறைந்த புகழால், திருமகள் போல வளர்த்தேன். செங்கண்மால் தான் கொண்டு போனான்" என்று கண்ணீர்விட அழகிய மணவாளன் சமாதானம் செய்து,

"உம்முடைய புத்திரியான ஆண்டாளை, திவ்ய மங்கள விக்ரஹ ரூபியாய், சொர்ணத் தண்டிகையில் ஸ்ரீ வில்லிபுத்தூருக்கு எழுந்தருளப் பண்ணிக் கொண்டு போவீராக. நான் பங்குனி உத்தரத்தன்று ஸ்ரீவில்லி புத்தூருக்கு வந்து நாச்சியாரைத் திருமணம் செய்து கொள்கிறேன்" என்று திருவாய் மலர்ந்தருளினார்.

பெரியாழ்வார் சந்தோஷமடைந்து, ஆண்டாளைத் திருப்பல்லக்கில் எழுந்தருளப் பண்ணிக் கொண்டு, அநேக விருதுகளுடனும், ஸ்ரீ வைஷ்ணவ வித்வத் கோஷ்டிகள் சூழ, சமஸ்தமான ஜனங்கள் உடன்வர ஸ்ரீ வில்லிபுத்தூர் வந்து சேர்ந்தார்.

அழகிய மணவாளன் பங்குனி மாதம் உத்தர நட்சத்திரத்தன்று, ஆண்டாள் பிரார்த்தித்தபடியே, மன்னாராக ராஜகோபாலனாக கருடவாகனத்தில் எழுந்தருளினார்.

திருக்கல்யாண உத்ஸவத்திற்கு பரதேச கோலத்துடன் திருவீதி எழுந்தருளும்போது சகலமானவர்களும் "அழகிய மணவாளன் வந்தான்", "ஆண்டாள் நாயகன் வந்தான்" என்று சந்தோஷ மடைந்தார்கள்.

முத்தடிப் பந்தலிலே, ஐந்து குடிக்கு ஒரு சந்ததியாக அவதரித்த ஆண்டாளின் திருத்தகப்பனாரான பெரியாழ்வார் முதலில் எழுந்தருளியிருக்க, சகல ஜனங்களும் சூழ்ந்திருக்க, அழகிய மணவாளனுடைய புரோஹிதர் எழுந்திருந்து "நான்முகனுக்கு நான்மறை ஓதிய பட்டருக்கு, பட்டர்பிரான் திருமகளான ஆண்டாளை பாணிக்ரஹணம் பண்ணிக் கொடுக்கும்படியாகக் கேட்டுக் கொள்கிறோம்" என்று சொன்னார்.

பெரியாழ்வாருடைய புரோஹிதர் முறைப்படியான கன்னிகாதானச் சடங்குகளை செய்வித்து, பெரியாழ்வார் "ப்ரதிச்சைனாம் பத்ரந்தே, பாணிக்ருண்ஹீஷ்வ பாணிநா" என்று தாரை வார்த்துக் கொடுக்க, ஸ்ரீராஜகோபாலன் ஸ்ரீ ஆண்டாளைத் திருமணம் செய்து கொண்டான்.

ஆண்டாளையும் மன்னரையும் கருடனையும் ஏகாஸனத்தில் எழுந்தருளப் பண்ணி ப்ரதி தினமும் பெரியாழ்வார் மங்களா சாஸனம் செய்து கொண்டிருக்கிறார்.

பிராட்டி அப்ராக்ருத திவ்ய தேசத்தைவிட்டு, திருத்துழாயை மாதாவாகக் கொண்டு, திருத்துழாய் அங்குரிக்கும்போதே வாசனையோடே இருக்குமாப் போலே, அவளும் அவதரிக்கும் போதே ஞான பரிபக்குவையாய், உபநிஷத்தினுடைய அர்த்தங்களை எல்லாம் 'திருப்பாவை'யாக அருளிச் செய்தும், தான் பகவானை அனுபவிக்க வேண்டி தாபத்துடன் 'நாச்சியார் திருமொழி' என்ற திவ்ய ப்ரபந்தத்தை சாதித்தருளியும், 'அளஹவி நிஹிதாபி ஸ்ரக்பிராக்ருஷ்ட நாதா' என்கிறபடி, ஸ்ரீரங்கநாதனைத் தன் அழகில் ஈடுபடுத்தி, 'நாடும் நகரும் அறிய நல்லதோர் கண்ணாலம் செய்து, சாடுறப்பாய்ந்த பெருமான் தக்கவாகைப் பற்றுக் கொலோ' என்னும்படி, எம்பெருமானையே ஆண்டு, ஆண்டாள் எனப் பெயர் பெற்றாள்.

ஆண்டாள் திருஅவதார உத்ஸவமான திருவாடிப் பூர உத்ஸவத்தின் 5வது திருநாளில் ஆண்டாளைக் கல்யாணம் செய்து கொள்ள விரும்பி வந்த திருவேங்கடமுடையான், திருமாலிருஞ்சோலை அழகன், திருத்தண்கால் அப்பன், வடபத்திரசாயி நால்வரையும் - பெரியாழ்வார் வரவேற்று, மங்களா சாஸனம் செய்து மறுநாள் காலை மாலை மரியாதைகளுடன் வழியனுப்பி வைக்கிறார்.

பெருமாள், தாயார், கருடன் ப்ரணவாகாரமாய் முப்புரியோடின திவ்ய தேசம் ஸ்ரீவில்லிபுத்தூர் என்பார்கள்-பெரியோர்கள். பெருமாள் (வடபத்ரசாயி) தாயார் (ஆண்டாள்) ஆழ்வார் (பெரியாழ்வார்) மூன்று அவதார விசேஷங்களும் சேர்ந்தது கோதை பிறந்த ஊரானதால் கோவிந்தன் வாழும் ஊராயிற்று. நீதியான் நல்ல பக்தர்கள் வாழும் ஊர், வேதக் கோனூர், வில்லிபுத்தூர் என்று பாரெல்லாம் கொண்டாடும்படியாகப் புகழ் பெற்றது இத்தலம்.



# வைணவ நெறி

திரு. வே. சோமசுந்தரம்
சென்னை

## முன்னுரை .

> " உலகம் யாவையுந தாமுளவாக்கலும்
> நிலைபெறுததலு நீக்கலு நீங்கலா
> அலகி லாவிளை யாட்டுடை யாரவா
> தலைவர் அன்னவர்க்கே சரண்
> நாங்களே "

என்பது கம்பராமாயணத்தில் பால காண்டத்து ஆரம்பத்தில் உள்ள கடவுள் வாழ்த்துப் பாடலாகும். கம்பரின் இராம காதை 'அறம் வெல்லும ... பாவம் தோற்கும்" என்ற கருத்தை அடிப்படையாகக் கொண்டிருந்தாலும், அரக்கத்தனத்தை மனித நேயம் வெற்றி கொண்ட வகையை விளக்குவதாய் இருந்தாலும், வைணவநெறியை பரப்ப வந்த பெருநூல் என்பதனை நாம் மறுகக முடியாது. இதனை வலியுறுத்தும் வகையிலேயே மேற்கண்ட பாடலானது வைணவத் தத்துவங்களின் முடிந்த முடிபைச் சாறாகப் பிழிந்து தருவதாக அமைந்துள்ளது. ஒருவனே இறைவன். அவனே பரவாசுதேவன். அவனது திருவிளையாட்டில் எழுந்தவையே எண்ணிறந்த அண்டங்களும், அவற்றிலே உண்டாகி மறையும பொருள்களாகிய உயிருள்ளவையும் உயிரற்றவையும் ஆகும். எனவே எப்பொருளுக்கும் அவனே தலைவன். அவனால மட்டுமே எப்பொருளையும் கடைத்தேற்ற முடியும். 'அவனன்றி வேறு கதியில்லை' என்றுணர்ந்து அவனிடத்தில் சரணாகதி அடையச் சொல்வதே வைணவ மதமாகும்.

வைணவம் ஒரு பழம் பெரும் சமயமாகும். அதன் பரப்பையும், பெருமையையும் ஒரு சிறு கட்டுரையில் கோடிட்டுக்கூட காட்டுவதென்பது எளிதான செயலல்ல. தற்கால அறிவியல் கல்வியில் பற்பல கலைச்சொற்கள் அறிவியல் கண்டுபிடிப்புகளைச் சுருங்கச சொல்ல உதவுவதைப் போலவே வைணவத்திலும் அரிய பெரிய தத்துவ விளக்கங்களின் சாரமாக பல கலைச் சொற்கள் விளங்குகின்றன. எனவே, வைணவமும் ஒரு அறிவியல் துறையைப் போல செம்மையாகவும், சீர்மையாகவும் வளர்ந்து வந்துள்ளதை அறியலாம். அதிலே முழுக்க மூழ்கிக் கருத்து முத்துக்களை அடைவதென்பது ஒரு சிறந்த ஆசாரியரை அணுகி 'குரு—சீடன்' முறையிலிருந்து பல காலம் கற்றுணர்ந்தாலே முடியும். அத்தகைய ஆராய்ச்சிகள் இக்காலத்திலும் ஒரு சிலரால் மட்டும் கைக்கொள்ளப் படுகின்றன என்பதை மட்டும் கூறி பாமரரும் அறிந்திருக்க வேண்டியதான வைணவக் கருத்துக்களில் சிலவற்றை மட்டும் இக்கட்டுரை எடுத்தியம்ப முயல்கிறது.

## வைணவம் – பொதுக் கருத்துக்கள்

விஷ்ணு என்ற சொல், "எங்கும் நிறைந்திருப்பவன்" என்று பொருள் படும். அச்சொல்லை அடிப்படையாகக் கொண்டே வைஷ்ணவம் அல்லது வைணவம் என்ற நெறி அமைநதுள்ளது. அதாவது, எங்கும் பரந்து விரிந்துள்ள விட்டுணுவே ஈஸ்வரன். அவனே பிரம்மம் என்றும் அழைக்கப் படுகிறான. அவனைச் சென்று சேரும் சீவன் நன்னிலையடைகிறான். சீவனின் பிறப்பு, இறப்புக்கு இடமளிப்பது இவ்வுலகமாகிய பிரகிருதி. பிரகிருதி வசப்பட்ட சீவன் பரமபதத்தில் உறையும் பரவாசுதேவனைச் சென்று சேர்வதே உய்யும் நெறியென உணர்ந்து கர்மம், ஞானம், பக்தி ஆகிய மூன்று வழிகளில் ஒன்றையேனும் கடைப்பிடித்து இறுதியில் பிரபத்தியாகிய சரணாகதி செய்கிறான். அப்பொழுது அவன் வினைத்தொகைகள் இல்லையாகிப் போக எல்லையில் பேரானந்த பதியாகிய பரமபதம் சேர்ந்து பரவாசு தேவனோடு ஒக்க இருந்து இன்பத்தில் திளைக்கிறான்.

வைணவக் கொள்கைப்படி ஈஸ்வரனும், சீவனும் என்றும் உள்ளவர்கள். ஈஸ்வரன் எங்கும் நிறைந்தவனாய், எலலாம் செய்ய வல்லவனாய், கருணாமூர்த்தியாய், அனந்தகோடி கல்யாண குணத்தவனாய் விளங்குகிறான். சீவனோ, அளவால் மிகக் குறுகியவனாகவும், சிற்றறிவு வாய்ந்தனவாகவும், வினை வயப்பட்டவனாகவும் உள்ளான். பிரகிருதி வசப்பட்ட சீவன் இன்ப துன்பங்களுககுக் காரணமான பிறப்பு, இறப்பிற்கு ஆளாகிறான். அவனே பிரபத்தியால் பரமபதம் சேர்ந்ததும் ஈஸ்வரனின் எல்லா நன்மைகளிலும் பங்கு பெறுகிறான்.

## வைணவம் காட்டும் கடவுள்

வைணவம் காட்டும் கடவுள் ஈஸ்வரன் எனப்படுகிறான். ஈஸ்வரன் என்றால் எல்லோருக்கும், எல்லாவற்றுக்கும் தலைவன் என்பது பொருள். அவன் படைப்பு, காப்பு, அழிப்பு ஆகிய முத்தொழிலும் செய்பவன். அதுமட்டுமின்றி, படைத்த படைப்பிலும் ஒரு நீக்கமற எங்கும் நிறைந்திருப்பவன. உலக உயிர்கள் தாமெடுத்துள்ள உடல்களுக்கு ஆதாரமாய் இருப்பதைப் போல் எல்லா உயிர்களினுள்ளும் அவற்றிற்கு நிலைகளனாய் ஈஸ்வரனே இருந்து வாழ்விக்கின்றான். உயிரற்ற பொருள்களுக்கும் அவனே காரணகர்த்தா.

அவன் நினைத்த மாத்திரத்தில் பரந்து விரிந்த பேரண்டங்கள் தோனறி விடுகின்றன. அவவாறே பிரளய காலத்தில் அவனில் யாவும் ஒடுங்கிப் போகின்றன. இவ்வாறான படைப்பு விளையாட்டை அவன் ஏன் செயகிறான் என்பது ஒரு பெரிய ரக சியமேயாகும். ஆனால் நம் முன் னோர்கள், சீவன்களின் முன்னேற்றத் திற்காகவே அவ்விதம் அவன் செய் தருளுவதாக கூறியுள்ளனர். படைப பிற்குட்படும சீவன் பரவாசுதேவ னைச் சென்றடைவதே சிறந்த இருப் பென உணர்ந்து பிரபத்தி செய்ய முற்படும்போது தன்னிலையடை கிறான்.

ஈஸ்வரனே புருஷன். அவனை நோக்குங்கால் பிற உயிரெல்லாம் பெண் இனத்தவரே. அவனையே கருதியிருந்து பரமபதத்தில் அவ னோடு உடனிருநது இன்பம் நுகரும் பேறுபெறத் துடிக்கும் சீவன்கள் அனைவரும் பெண்களாகவே கருதப் படுவர்.

'அகடித கடனா சாமர்த்தியம்' என்று ஒன்று உண்டு. மாறுபட்ட இயல்புடையவற்றை ஒன்று சேர்க்கும் ஆற்றலே அது. அச்சாமர்த்தியத் தில் ஈஸ்வரனுக்கு இணையாக யாரையும் எண்ணிக்கூட பார்க்கமுடி யாது. காட்சிக்கு மிகப் பெரியவும் அரியவுமான பலவற்றையும்படைத்து அவற்றை விந்தையான கூட்டுறவின் மூலம் பன்னெடுங்காலம் இயங்கவைக் கும் படு சாமர்த்தியக்காரனாயிற்றே அவன்! காலமும் கணக்கும் நீத்த மூலப் பரமபொருளான அவனே நம் மைப்போல் மானிடவனாகவும் வைத்தெண்ணப்படுமாறு எளிமை யாகப் போந்து-இராமனாக, கணண னாக பல அவதாரங்கள் எடுத்து நமக்கு வழிகாட்டியுள்ளான். இதி லும் அவனது அகடித கடனாசாமர்த் தியம் வெளிப்படக் காணலாம்.

அவனுக்கு அடங்காத பொருள் இல்லை. ஆட்படாத ஆள் இல்லை. வணங்காதவர்க்கு நல்ல வாழ் வில்லை. வணங்கியவர்க்கு என்றுமே தொல்லையில்லை.

படைப்பவனும் அவனே; படைப் பிலுறை பொருளும் அவனே. நிலத் திற்கு சுவை, ஒளி ஊறு, ஓசை நாற் றம் என்ற ஐந்து குணங்களும் உண்டு. நீருக்கு சுவை, ஒளி, ஊறு, ஓசை ஆகிய நான்கு தன்மைகளே உண்டு. நெருப்புக்கு ஒளி, ஊறு, ஓசை என்னும் மூன்று குணங்கள் உள்ளன. காற்றிடத்தில் ஓசை, ஊறு என்ற இரணடு தன்மைகளையே காணலாம். ஆகாயத்திற்கு ஓசை என்ற ஒருஇயல் பே உண்டு. இவ்வாறாகப் படைப்பில் அங்கம வகிககும் ஐம்பெரும் பூதங் களும் வேறுவேறு தன்மை உடையன. அவ்வேறுபட்ட தன்மைகளைத் தனித் தனியே நினைத்துப் பார்ககவே நமக்கு வியப்பு மேலிடுகிறது. அவற் றின் செயற்கூட்டுறவை எண்ணி னாலோ நம் ஆச்சரியம் மேலும் பெருகுகிறது. அவற்றையெல்லாம் படைத்துஇயக்கும் ஈஸ்வரனே அவை யாகவும் ஆகி, அவற்றை உள்ளிருந்து செயற்படுத்தும் சக்தியாகவும் ஆகி யுள்ளான் என்றறிய வரும்போது நாம் வியப்பின எல்லைக்கே சென்று விடுகிறோம். கீழ்க்காணும் பாட லில் திருமழிசையாழ்வார் இறைவன் ஐம்பூதங்களிலும் உறையும் தன் மையை உள்ளவாறறியும ஆற்ற லின்றி வியப்பதைப் போல் நாமும் மலைப்பில் மூழ்க வேண்டியதுதான்!

"பூநிலாய ஐந்துமாய்ப் புனற்கண்
நின்ற நானகுமாய்த்
தீநிலாய மூனறுமாய்ச் சிறந்த கால
இரண்டுமாய்
மீநிலாய தொனறுமாகி வேறு வேறு
தனிமையாய்
நீநிலாய வண்ண நின்னை யார்
நினைக்க வல்லரே?"

## ஈஸ்வரனின் ஐந்து நிலைகள்

வைணவம் ஈஸ்வரனை ஐந்துநிலை களில் வைத்துப் போற்றுகிறது. அவற்றை வரிசையாகக் கீழே காண லாம்.

1. பரமபதத்தில் பரவாசுதேவன் ஸ்ரீதேவி, பூதேவி, நீளாதேவி என்ற மூன்று தேவியருடன் கூடிய வனாய், நான்கு திருக்கரங்கள் உடை யவனாய், அவற்றில் சங்கு, சக்கரம், கதை, வாள், வில் ஆகிய ஐம்படை கள் தாங்கியவனாய், சகலவிதமான அலங்காரங்களோடும் காட்சி தருபவ னாய், கருடன், அனந்தன, சேனை முதலியார் முதலிய நித்தியசூரிகளின் இன்னிசை மழையில் மூழ்கியவனாய் திருக்கல்யாண கோலத்தில் பேரா னந்தமாய் விளங்குகின்றான். இந் நிலை பரம் என்று சொல்லப்படும்.

2. பரவாசுதேவனே உலகைச செயற்படுத்த வேணடி வாசுதேவன், சங்கருடணன், பிரத்தியும்னன், அநி ருத்தன் ஆகிய நான்கு மூர்த்திகளாய் எழுந்தருளியுள்ளான். இந்நிலை வியூகம் எனப்படும். இந்த நான்கு வியூக மூர்த்திகள் ஒவ்வொருவரிட மிருந்தும் மும்மூவராக முறையே கேசவன், நாராயணன், மாதவன், கோவிந்தன், விஷ்ணு, மதுசூதனன், திரிவிக்கிரமன், வாமனன். ஸ்ரீதரன், இருடிகேசன், பத்மநாபன், தாமோ தரன் என்கின்ற பன்னிரண்டு வியூக மூர்த்திகள் தோன்றியுள்ளனர்.

3. ஈஸ்வரனின் அவதாரங்கள் விபவம் என்று சொல்லப்படும். இந் நிலையில் இறைவன் படைப்பிலுள்ள எவ்வகை உயிராகவும் தோன்ற வல்ல வன். சோமுகாசுரன் என்ற அசுர னால் பிரம்மனிடமிருந்து கவரப் பட்டு கடலில் ஒளித்து வைக்கப்பட்ட வேதங்களை மீனாக வநது அவ்வசு ரனைக் கொன்ற பின் மீட்டுக் கொணர்ந்தான். திருப்பாற்கடலை அமுதம் வேண்டி தேவரும் அசுரரும் கடைந்த போது மத்தான மந்தார மலையை அமிழாமல் ஆமையாய் இருந்து தாங்கினான். இரணியாட் சன் என்பவன் பூமியை பாதாளத்தில் ஒளித்து வைத்த போது வராகமாக

அவதரித்து அவ்வரக்கனைக்கொன்று பூமியை மீட்டான். தானே இறை என்று தருக்கித் திரிந்த இரணியனைக் கொல்வதற்காக சிங்க முகத்தோடும், மனித உடலோடும் நரசிங்கமாக வந்தான். மாவலியிடம் மூன்றடி மண் வாமனாய் யாசித்து பெற்ற பின், மூவுலகங்களையும் அளந்த போது திரிவிக்கிரமனாய் நீண்டான. தீய அரசர்களில் இருபத்தோரு தலைமுறையினரை அழிப்பதற்காக பரசுராமனாக பிறப்பெடுத்தான். மண்ணில் மனித தர்மம் நிலைபெறச் செய்ய இராமனாகத் தோன்றினான். பூமி பாரத்தைத் தொலைக்க கண்ணனாக வந்த போது அவனே பலராமனாக அண்ணன் என்ற முறையில் உடனிருந்து உதவினான். இனி, கலியுக முடிவில் குதிரை வீரனாக கல்கி என்ற பெயரில் அவதாரம் எடுத்து கலியை ஒழித்து கிருதயுக நன்னிலையைத் தோற்றுவிக்கப் போகிறான்.

நாம் இதுகாறும் கண்ட பத்தவதாரங்களேயன்றி முப்பத்தாறு அவதாரங்கள் உண்டென்றும், அதர்மத்தை ஒழித்து தர்மத்தை நிலைநாட்டவே ஈஸ்வரன் அவதரிக்கிறான் என்றும் வைணவர்கள் நம்புகின்றனர்.

4. அவதாரங்கள் அவ்வப்போது எடுப்பவை. ஆனால் அணுப்பொழுதும் உயிர்களைப் பிரியாது அவற்றினூடேயும், உள்ளேயும் இறைவன் மறைந்துள்ளான் என்பதையும் நாம் தெரிநது கொள்ள வேண்டும். இந்நிலை அந்தர்யாமித்துவம என்று அழைக்கப்படும். இறைவன் உயிருள் உறைவதால், அதனைச் சேரும் நலத்தீங்குகள் அவனையும் சேருமோ என்று ஐயுறலாகாது. அவன் சாட்சியாக மட்டுமே இருந்து நன்மை, தீமைகளை நிகழ்த்துவிப்பான். உள்முகம் நோக்கித் தம்மை உணரும் அடியாருக்கோ வினைப்பயன் முழுவதையும் அறுத்தொழிப்பான். நலமிக்க வைகுண்டத்தில் சேர்த்துக் கொள்வான்.

# கோதண்ட இராம ஈசுவரர்

இலங்கையினின்றும் சீதாப் பிராட்டியுடன் திரும்பிய ஸ்ரீராமன் கன்னியாகுமரியை அடைந்தார். அங்குள்ள 'கடல் குமரி'யிடம் விடைபெற்றுக் கொண்டு வடதிசை நோக்கிப் பயணமானார். அவ்வாறு செல்லுங்காலை தற்போது 'கயத்தார்' என வழங்கப் பெறும் மதுரை—திருநெல்வேலி தேசிய நெடுஞ்சாலையில் உள்ள ஊரின் மேல் புறம் ஓடும் ஆற்றின் கரையில் சிறிது ஓய்வெடுக்க எண்ணி அமர்ந்தனர். நீர் வேட்கையுற்ற அண்ணியும் குடிக்க நீர் வேண்ட பெருமானும் அவ்வாற்று நீரை அள்ளிக் கொடுத்தார். ஆற்று நீர் கசப்பாக இருக்க அண்ணியும் இது என்ன (கயர்+ஆறு) கயத்தார் எனச் சொல்லி தண்ணீரைக் குடிக்காமல் துப்பிவிட்டார். அன்று முதல் அப்பகுதி கயத்தார் என வழங்கப்படுவதாயிற்று. கயர் என்றால் உவர்ப்பு என்னும் தமிழ்மொழிப் பொருளே இதனை விளக்கும். நீர் வேட்கை தீராத அண்ணியும் மேலும் நீர் வேண்ட அண்ணலும் அம்பினால் அருகே ஒரு இடத்தில் சிறு துளைபோட நீர் ஊற்று பெருகிற்று. அவ்வூற்று நீர் ஆற்று நீரினைப் போலன்றி இன்சுவையாக இருக்க அண்ணியும் அண்ணலும் நீர் அருந்தி சிறிது நேரம் அங்கு ஓய்வெடுத்தனர். அவ்வமயம் எதிராக இருந்த சிற்றூரில் வசிக்கும் அந்தணரும், அறவோரும் ஸ்ரீராமனும்—ஸ்ரீதேவியும் தங்கியுள்ள இடத்தினின்றும் பேரொளி வீசுவதைக் கண்டனர். என்னவென்று அறிய அவ்விடத்தை நோக்கி ஓடினர். அவர்கள் கண்ட காட்சி, அவர்களை பிரமிக்கச் செய்துவிட்டது. அண்ணலும், அண்ணியும் மணக்கோலத்தில் காட்சியளித்தனர். ஒருவருக்குப் பெருமாளகத் தென்பட்டார். ஒருவருக்கு ஈசுவரனாகக் காட்சியளித்தார். பின்பு அவர்கள் வேண்டுகோளின்படி அண்ணலும், அண்ணியும் அவ்வூர்த் தேரிலேறி ரதவீதியிற் பவனி வந்தனர். எல்லோரும் கண்டுகளித்தனர். அதன்பின் இருவரும் அவ்வாற்றங்கரையை அடைந்து, அங்கேயே தம்மைப் பூசிக்குமாறு அறிவுறுத்தி மறைந்தனர். பின்னர் அங்கு ஒரு கோவில் எழுப்பப்பட்டது. இறைவனை கோதண்ட இராம ஈசுவரர் என்றும், அம்மையை அகிலாண்ட நாயகி என்றும் வழங்கி வழிபடலாயினர். இன்றும் இத்திருத்தலம் கயத்தார் அருகே வீரபாண்டியக் கட்டபொம்மன் தூக்கிலடப்பட்ட இடத்துக்கு மேல்புறம் உப்பாற்றங்கரையில் உள்ளது. இன்றும் இவ்வாற்று நீர் உவர்ப்பாகவே உள்ளது. ஆற்றங்கரையில் பெருமானால் தோண்டப்பட்ட ஊற்று நீர் இனிப்பாகக்குடிப்பதற்கு உபயோகப்படுத்தப்பட்டு வருகிறது. இத்திருத்தலத்து தலவிருட்சம் 'மருது' என்றும் உப்பாற்று நீரில் நிலைத்து நிற்கிறது. இறைவனை இலிங்க வடிவில் வழிபடுகின்றனர். அன்றிருந்த ஊரும், இரதவீதிகளும முற்றிலும் அழிந்துவிட்டன. ஆனால் அன்றைய திருக்கோவில் மட்டும் பாதுகாக்கப்பட வேணடிய ஒன்றாக உள்ளது. இன்று 'கயத்தார்' என வழங்கப்படும் ஊர் பழைய ஊருக்குத் தெற்கே புதியதாக ஏற்படுத்தப்பட்ட ஊராகும். இங்குறையும் கோதண்ட இராம ஈசுவரர் அடி பணிந்தால் வினைகள் எல்லாம் விலகி ஓடும் என்பது வரலாறு கூறுவதாகும். இத்திருத்தலத்தை 'முதல் இராமேசுவரம்' என்றும் கூறுவர்.

—முடிவை முத்து.

5. நாம் இதுகாறும் கண்ட நிலைகளைப் போலன்றி ஐந்தாவது நிலையில் கண்ணால் கணடு களிக்கவும், பூ முதலியன கொணடு வழிபாடியற்றவும் எளிவந்த தன்மையனாய் திருத்தலந்தோறும் உள்ள கோயில்களில் சிலைவடிவில் வீற்றிருநதருளுகின றான். இந்நிலை அர்சசை எனப் படும். அர்ச்சிக்கப்படும் அருள் நிலையே அர்ச்சையாய் உள்ளது. இந்நிலை சுயமாகவோ, தேவர்களாலோ, சிததர்களாலோ, மனிதர்களாலோ தோற்றுவிக்கப்பட்டிருக்கலாம். இநநிலையே பாமரர்களும் வழிபட்டு உய்ய உதவும் பெறறியதாகும் திருவேங்கடவனாகவும், திருவரங்கனாகவும் உள்ளவன் அர்ச்சாவதார மூர்த்தியேயாகும். அர்ச்சாவதார நிலைகள் இருபத்து நான்கு என வகுக்கப்பட்டிருந்தாலும், நின்ற திருக்கோலம், கிடந்த திருக்கோலம், இருந்த திருக்கோலம என்ற மூன்று நிலைகளில் சிந்திப்பது வைணவர் வழக்கம.

நாம் இதுகாறும் கணட இறைவனின் ஐந்து வகை வடிவங்கள் முறையே மேக நீர், கடல நீர், ஆற்றுநீர், கிணற்றுநீர், குளத்து நீர் ஆகியவற்றோடு ஒப்பிடப்படும். இவற்றில் குளத்து நீரே யாவருக்கும் எளிதில் கொள்ளலாந் தன்மையதாய் உதவும் பான்மையை உய்த்துணருங்கால் அர்ச்சாவதாரத்தின் பெருமை நன்கு அறியலாம்.

## வைணவத்தில் பிராட்டியார் நிலை

ஈஸ்வரனிடம் சீவன்களின் கடைத்தேற்றம் வேண்டி, தாயினும் பரிந்து பேசும் தயாள குணம் கொண்டவளாக திருமகள் இலங்குகின்றாள். வைணவர்களைப பொறுத்தவரை திருமாலே யாரினும் மேம்பட்ட பரம்பொருள். பிராட்டியார் கூட அவனுக்கு அடிமைப்பட்டவளே. ஆனால் அவன் அன்புககு பாத்திரமானவளாய் - அடியார் துயர் தீர்க்கும் ஆற்றல் மிக்கவளாய்-கொழுநனோடு இணையாய் இருந்து இகபரம் அனைத்தையும் இயக்குபவளாய் விளங்குகின்றாள.

## வைணவரின் இலக்கணம்

வைணவராய்ப் பிறந்தார்க்கு வைகுந்தநாதனே பற்றுக்கோடு. மறந்தும் புறந்தொழல் அவர்க்கு ஆகாத ஒன்று. அதே நேரத்தில் 'உயிர் இறக்கம்' என்பது அவர் தம் இரத்தத்தில் இழையோடி இருக்க வேணடிய பண்பு. துன்பத்தில் அகப்பட்ட உயிர்யாதாயினும், எக்குலத்ததாயினும் வேறுபாடு கருதாது தம்மாலான உதவிகளைச செய்தல் ஒரு சிறந்த வைணவனின் கடமையாகக கருதப்படுகிறது. எம்பெருமானின இறக்கம் வேணடி தொழுபவன் துன் புறும பிற உயிர்கள் பால இரக்கம் கொணடு உதவல் வேணடப்படுவதே ஆகுமன்றோ?

ஒரு சிறநத வைணவனைப் பற்றி அனந்தாழ்வார் பின்வருமாறு கூறியுள்ளார்; "வைணவன் கொக்கைப் போலவும், கோழியைப் போலவும், உப்பைப் போலவும், உம்மைப போலவும் இருப்பான்." கொக்கானது நீருள்ள இடத்திலேயே வசிக்கும். அதைப் போல வைணவமும் வைணவத் திருக்கோயில்கள், வைணவ பாகவதர்கள் நிரம்பிய இடத்திலேயே வாழ்வான. கோழியானது குப்பையைக் கிளறி தனக்கு இரையாகத் தேவையானதை மட்டும் எடுத்துக் கொள்ளும். அதைப்போல வைணவனும் பிறரிடத்துள்ள குற்றங்களைக் காணாது குணங்களை மட்டுமே போற்றிப் பாராட்டுவான. உப்பாவது தான் கரைந்து அழிநதாலும் சேரும உணவுக்கு சுவை அளிக்கும். அதைப்போல வைணவனும் தான் அழிந்தாலும் தம்மைச் சுற்றியுள்ளவர்கள் வாழ்வுக்காக உழைப்பான். ஒரு விருந்துபசாரத்தில் முதலிலும், நடுவிலும் தமக்கு அமர தகுதியில்லையென்று கருதிக் கடைசியில் உட்காரச் சென்ற அன்பரைப் பார்த்து, 'உம்மைப் போல' அதாவது, அடக்கமே உருவாய் - வைணவன் இருப்பான் என்று கூறினாராம் அனந்தாழ்வார்.

ஒரு சிறந்த வைணவன் இறைவன் பால் அசைக்கமுடியாத நம்பிக்கையோடிருத்தல் வேணடும். எத்தகைய துன்பம் வந்தாலும், எப்பேர்ப்பட்ட சோதனைக்கு ஆளானாலும் "எல்லாம் என் நன்மைக்கே எம்பெருமான் ஆட்படுததுகின்றான்" எனற உறுதியான எணணத்தோடு இருத்தல் வேணடும. ஒரு நோயாளிக்குத் தேவைப்பட்டால் அவனுடலை அறுத்தும வைத்தியம் செய்வார் மருத்துவர். அதற்காக அவர் மீது எத்தகைய வெறுப்பும் நோயாளி கொள்வதில்லை, மாறாக, 'என் நனமைக்கே மருத்துவர் எதுவும் செய்வார்' என்கிற நம்பிக்கையில் மாறாதவனாய் இருக்கிறான். அதைப் போலவே இறைவனும் உயிர்களின் வினைவலிக்கேற்ப இன்பதுன்பங்களை அனுபவிக்க வைக்கின்றான். எனவே அவனை நொந்து கொள்வதில் பயனேதும இல்லை. வைணவனானவன இறையருளையே என்றும் வேண்டியவனாய் அவனே எல்லாம் எனறு அவனருளே பார்த்திருப்பன். இவ்வருமையான கருத்தமைந்த குலசேகர ஆழ்வாரின் பாடல் வருமாறு:

'வ ளால் அறுத்துச சு டினும
மருத்துவ ப ல்
மாளா த க தல் நோயாளன ப ால்
மாயத்தால்
மீளாத் துயாதரினும் வி ற்றுவக்கோட்
டமமா நீ
ஆ ா னதருளே பார்ப்பன்
அடியேனே'
(பெருமாள் திருமொழி)

இப்பாடலில், 'மாளாத காதல நோயாளன்' என்ற தொடர், எணணி எணணி அனுபவிக்க வேண்டிய பான்மையதாகும். இத்தொடர், "மாளாத காதல் வைணவனோடும்" ஒத்துப் போவதை எண்ணி இன்புறலாம்.

(40-ம் பக்கம் பார்க்க)

# குறளின் சிறப்பு

திரு ச தனசேகரன்,
மதுரை

நீதி நூல்களிலெல்லாம் உலகப் புகழ் வாய்ந்த ஒப்பற்ற நூலாகத் திகழ்வது திருக்குறளேயாகும். இந் நூல் அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பால் என்னும் முப்பெரும் பிரிவுகளையும், 133 அதிகாரங்களை யும், அதிகாரத்திற்குப் பத்துப் பாக்க ளாக மொத்தம் 1330 குறட்பாக்க ளையும் கொண்டது. இந்நூல் முழு மைக்கும் கடவுள் வாழ்த்து, வான் சிறப்பு, நீத்தார் பெருமை, அறன் வலியுறுத்தல் என்ற நான்கு அதிகா ரங்கள் பாயிரமாக விளங்குகின்றன

அறத்துப்பால், பொருட்பால், காமத் துப்பால் இம் மூன்றையும் மூன்று வழிகளிலே இதன் சிறப்பை ஆராய்ந்து நோக்கலாம்.

என்றும் அறத்தின் இன்றியமையா மையை வள்ளுவப் பெருந்தகை மிக வும் தெளிவாகப் விளக்குகின்றார்

**ஆ அறிவிலக்கியம்:**

திருக்குறள் அறநூல் மட்டுமன்று, வாழ்க்கைக்கு நல்ல விளக்கம் தரும் சிறந்த இலக்கிய நூலும் ஆகும். மனிதன் தன்னோடும் தன் மக்க ளோடும், பெற்றோரோடும், சுற்றத் தாரோடும், அண்டை அயலாரோடும், ஆளும் அரசனோடும், அருள் புரியும் இறைவனோடும் எவ்வாறு நடந்து கொள்ள வேண்டும் என்பதை விரிவாக விளக்கி உரைக்கும் சிறந்த வாழ்க் கைக்கு வழிகாட்டிடும் நூலாகும். வள்ளுவப் பெருந்தகை மனித வாழ்க்

ஆனால் அவரே நாம் வாழும் இவ் வுலகின் இயற்கையையும், மனித இயல்பையும் அறியாதவரல்லர்; ஆங் காங்கு தம் உலகியலறிவையும் உணர்த்திச் செல்லுகின்றார்.

"செயற்கை அறிந்தக் கடைத்தும் உலகத்து
இயற்கை அறிந்து செயல்"

"இருவேறு உலகத்து இயற்கை திருவேறு
தெள்ளிய ராதலும் வேறு"

"பொருளல் லவரைப் பொருளாகச் செய்யும்
பொருளல்லது இல்லை பொருள்"

"தூங்குக தூங்கிச் செயற்பால; தூங்கற்க
தூங்காது செய்யும் வினை"

**அ அற இலக்கியம்:**

அறம் போதிக்கும் நூல்களிளெல் லாம் திறம் மிக்க நூல் திருக்குறளே யாகும். வள்ளுவர் அறத்தைத்தான் உயிருக்கு ஆக்கந்தருவதாகக் கண் டார்; அதுவே சிறப்பையும், செல் வத்தையும் ஒருங்கே ஈன வல்லது என்பதை உணர்ந்தார்; எனவே மாசிலாத மனமுடைய அறம் என விளக்கி, அவ்வறத்தை அன்றறிவாம் என்னாது, அல்லும் வகையெல்லாம் ஓவாது செய்ய வேண்டும் என வற் புறுத்துகிறார். அறனறிந்து பொருள் ஈட்டி அற வழியிலே இன்பங்காண வேண்டும். ஏனென்றால், அறத்தால் வருவதே இன்பம் என்று ஆணித்தர மாகக் கூறுகிறார்.

'ஈன்றாள் பசிகாண்பான் ஆயினும் செய்யற்க
சான்றோர் பழிக்கும் வினை'

என்றும்,

'என்றும் ஒருவுதல் வேண்டும் புகழொடு
நன்றி பயவா வினை'

கையை நன்கு நுணுகி நோக்கி ஆராய் யும் ஆற்றல் பெற்றவராவார். அத னால்தான்,

"மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்தறன்
ஆகுல நீர பிற"

என்று அறத்தின் இயல்பையும்,

"உற்றநோய் நோன்றல் உயிர்க்குறு கண் செய்யாமை
அற்றே தவத்திற்குரு'

என தவத்தின் இயல்பையும் வரை யறுத்துக் கூறுகிறார்.

அவர் சில வேளைகளில், இலட்சிய உலகிலிருந்து சில அறங்களைப் போதிப்பதுண்டு. உதாரணமாக,

"பெயக்கண்டும் நஞ்சுண் டமைவர் நயத்தக்க
நாகரிகம் வேண்டு பவர்"

"இன்னாசெய் தார்க்கும் இனியவே செய்யாக்கால்
என்ன பயத்ததோ சால்பு"

என்கிறார்.

"நன்குற்ற லுள்ளுந் தவறுண்டு அவரவர்
பண்பறிந் தாற்றாக் கடை"

வாழ்க்கையை நன்கு ஊடுருவி ஆராய்ந்த காரணத்தால் வாழ்க்கை யின் அடித்தளத்தில் இயங்கும் இரு வேறு முரண்பட்ட சக்திகளையும் அழகாக அளவறிந்து, தம் குறட்பாக் களில் காணுகின்றார். 'ஊழிற் பெருவலியாவுள' என்று ஒரு குறட் பாவில் கேட்பார். 'ஊழையும் உப் பக்கம் காண்பர்', 'உலைவின்றித் தாழாது உஞற்றுபவர்' என்று மற் றொரு குறட்பாவிலே அவர் மறுத்துக் கூறுவார். 'இரக்க இரத்தக்கார்க் காணின்' என்று ஒரு பாவிலே உரைப் பார். அதையடுத்து 'காவாது உவந் தீயும் கண்ணன்னார் கண்ணும் இர வாதே' என்று கூறுவார். பார் வைக்கு முரண்போலத் தோன்றும் இக்கருத்துக்கள் வள்ளுவருடைய உரம்வாய்ந்த உள்ளத்தையும், பரந்து பட்ட அனுபவத்தையும்தான்எடுத்து

## தி. தி. தேவஸ்தான சமய நூல்கள்

### தமிழ்

| | | ரூ. காசு. |
|---|---|---|
| 1. | ஸ்ரீ வேங்கடேச சுப்ரபாதம் (ஸ்தோத்ரம், ப்ரபத்தி, மங்களா சாஸனங்களுடன்) | 0—50 |
| 2. | ஏழுமலை யாத்திரை — திரு. டி. கே. நாராயணன் | 0—75 |
| 3 | அன்னமய்யா ஓர் அறிமுகம் டாக்டர். பொன். சௌரிராஜன் டாக்டர். கே. சர்வோத்தமன் | 1—00 |
| 4. | பகவத் சந்தேசம் (தமிழாக்கம்) டாக்டர். பொன் சௌரிராஜன் | 0—50 |
| 5. | இந்து சமயக் கையேடு (தமிழாக்கம்) அ. நடராஜன் | 1—50 |
| 6. | நித்யாநுஸந்தானம் (வடகலை) | 4—00 |
| | நித்யாநுஸந்தானம் (தென்கலை) | 4—50 |
| 8. | சித்திரத்திருப்பாவை — பி. ஸ்ரீ. | 8—25 |
| 9. | கண்ணன் பேசுகிறான் —நஜன் | 0—50 |
| 10 | சுவாமி பட்டினத்தார் டாக்டர். ஜி. டி. கோபாலகிருஷ்ண நாயுடு | 1—00 |
| 11. | முக்கவி கண்ட காப்பியம் — டாக்டர். டி. ஜி. அனந்த சுப்ரமணியம் | 12—00 |

### சம்ஸ்கிருதம்

| | | |
|---|---|---|
| 1. | ஸ்ரீ வேங்கடேஸ்வரா அஷ்டோத்ர ஸகஸ்ரநாமம | 0—62 |
| 2. | அலங்கார ஸங்ரஹம் —சி. கே. பாஸ்கரராவ் | 16—00 |
| 3. | கடோபநிஷத் —டாக்டர். கே. சி. வரதாசாரியார் —டாக்டர். டி. தாதாசாரியார் | 15—00 |
| 4. | க்ரியாதிகாரா — தொகுத்தவர் : டாக்டர். எஸ். பி. ரகுநாதாசாரியா | 25—00 |
| 5. | மார்க்கண்டேய ஸம்ஹிதா | 18—00 |
| 6. | ப்ரஸ்னோபநிஷத் | 11—00 |
| 7. | ஸ்ரீ வேங்கடேஸ்வர சுப்ரபாதம் | 0—12 |
| 8. | சீதாராமாஞ்சநேயம் டாக்டர். டி. அர்க்கசோமயாஜி | 50—00 |
| 9. | தத்வ சாங்க்யானம —திரு. ஆர். ராமமூர்த்தி சர்மா | 2—00 |
| 10. | பிரம்மசூத்ர பாஷ்யம்-தொகுதி - 1 திரு. —ஆர். ராமமூர்த்தி சர்மா | 30—00 |

மேற்படி நூல்களுக்கான தொகையை வங்கி டி. டி. அல்லது எம். ஓ. மூலமாக அனுப்பிப் பெற்றுக்கொள்ளலாம். வி. பி. பி. மூலமாக நூல்களை அனுப்புதல் இயலாது. நூல்களுக்கு "மக்கள் தொடர்பு அலுவலர் நூல் வெளியீட்டுப் பிரிவு, தி.தி.தேவஸ்தானம், திருப்பதி" எனும் முகவரியுடன் ஆங்கிலத்தில் தொடர்பு கொள்ளவும்.

காட்டுகின்றன. எனவே திருக்குறள் தலைசிறந்த ஒரு பெரும் கலைக் களஞ்சியமாகத் திகழ்வதைக் காணலாம். இவ்வியல்பை கருதித்தான் மதுரைத் தமிழ் நாகனார் எனும் புலவரும்,

"எல்லாப் பொருளும இதன் பாலுள;
இதனபால்
இல்லாத எப்பொருளும் இல்லை
யால்"

என்று கூற முற்பட்டார். ஆகையால் இத்தகைய சிறப்பு இயல்புவாய்ந்த திருக்குறளை சிறந்த 'அறிவிலக்கியம்' எனவும் பாராட்டி மகிழலாம்.

**இ உணர்ச்சி இலக்கியம் :**

திருக்குறள் அற நூல் மட்டுமன்று; கற்பனையாற்றல் படைத்த சிறந்த உணர்ச்சி இலக்கியமுமாகும். இயற்கையை நன்கு தேக்கி பல அழகிய உவமைகளைக் கூறி, நம் உள்ளத்தில் உணர்ச்சிவெள்ளத்தை அலைமோத வைக்கிறார் இவர் இயற்றியுள்ள காமத்துப்பால் பகுதி, தூய காதல் உணர்ச்சிவாய்ந்த சிறந்த கற்பனை இலக்கியமாகும்.

இத்தகைய சிறப்புவாய்ந்த திருக்குறளைக் கற்று மகிழ்ந்த பாவாணர்கள் 'திருவள்ளுவர் மாலை' எனும் தொகுப்பில் திருக்குறளைப் பாராட்டிப் பல பாடல்களைப் புனைந்துள்ளனர். இதன் சிறப்பையறிந்த தருமர், மணக்குடவர், தாமத்தர், பரிதி, பரிமேலழகர் போன்ற பதின்மர் உரை எழுதியுள்ளனர். முனைவர் மு. வரதராசனார் அவர்கள் எழுதிய இனிய தெளிவுரை இதுவரை கிட்டதட்ட ஒன்பது நூறாயிரம் படிகள் விற்பனையாகியுள்ளன என்பதனை அறியும் பொழுது மக்களை கவர்ந்த உரை இதைத் தவிர வேறொன்றுமில்லை என்று உணரலாம் ஏறக்குறைய முப்பத்து மூன்று மொழிகளிலே, இந் நூலை மொழிபெயர்த்துள்ளனர். முனைவர் ஆல்பர்ட் சுவைட்சா வள்ளுவரை வானளாவப் புகழ்கிறார். இதனால்தான் பாவேந்தன் பாரதியும்

"வள்ளுவன தன்னை உலகினுக்கே
தந்து
வான்புகழ் கொண்ட தமிழ்நாடு"

எனப் பாராட்டி மகிழ்கின்றார்.



# லிங்க பூஜை

ஆபதா மபஹர்த்தாரம் தாதாரம்
ஸர்வ ஸம்பதாம் |
லோகாபிராமம ஸ்ரீராமம் பூயோ
பூயோ நமாம்யஹம ||
ஆர்த்தானாம் ஆர்த்தி ஹந்தாரம்
பீதானாம் பீதி நாஸனம |
த்விஷதாம் காலதண்டம் தம்
ராமசந்த்ரம நமாம்யஹம் ||

ஸ்ரீ வால்மீகி ராமாயணத்தின்படி ஸ்ரீ ராமனுடைய குல தெய்வம் இக்ஷ்வாகு குல தனமான ஸ்ரீரங்கநாதனே என்பது நிரூபிக்கப்பட்டது முதல் கட்டுரையில். இக்கட்டுரையில் துளசிதாஸர் தெரிவிப்பது என்ன என்பதை ஆராய்வோம். வட இந்திய மக்களைப் பொறுத்த வரையில் ராமாயணம் என்று சொன்னால் அது கோஸ்வாமி துளசிதாஸ் இயற்றிய "ராமசரிதமானஸ்" என்றால் மிகையாகாது. ராமாயணத்திற்காகவே இவர் இயற்றிய பிற நூல்கள் கவிதாவளி, தோஹாவளி, மானஸரஸஸ்யம் முதலிய நூல்களாகும். இவை ஹிந்தி ஸாஹித்யத்திற்கு பெருமை சேர்க்கும் நூல்களாகவும் திகழ்கின்றன.

இவர் லௌகிகத்தில், ஒரு அரசரிடம் பணியில் இருந்ததாகவும் ஒரு முறை அரசருடன் பல நாடுகளுக்குச் சென்று சொந்த ஊருக்குத் திரும்புகையில் தன்னுடைய மனைவி இல்லத்தில் இல்லாததை அறிந்து வருந்தி அருகில் உள்ளவர்களிடம் விசாரித்து அவள் தன் தாயார் வீட்டிற்குச்சென்றுள்ளதை அறிந்து, உடனே இரவு நேரம் என்றும் பாராமல், விஷயப்ப்ரவணரானதால், வழி இடையில பெருக்கெடுத்து ஓடும் ஆற்று வெள்ளத்தையும் பொருட்படுத்தாமல், அதிலே குதித்து நீந்தி ஒரு வழியாக மாமனாரின் வீட்டிற்குச் சென்று கதவு தட்டியும் பலன் இல்லாததால் சாளரத்தின் வழியாக ஏறிக் குதித்து, தன் மனைவியை தட்டி எழுப்பினார். இவருடைய இச்செய்கையை கண்ட இவருடைய மனைவி 'ஓ! ஸ்வாமி! மாம்ஸ பிண்டமான இச்சரீரத்தை காணபதற்காக இவ்வளவு தூரம் எனக்காக நடந்தே வந்துள்ளீர்கள். இடையே பெருக்கெடுத்து ஓடும் நதியில் நீந்தியதால் தங்களுடைய திருமேனி நனைந்துள்ளது. மேலும் ஒரு திருடனைப் போலே சாளரத்தின் வழியே ஏறிக் குதிக்கவும் செய்தீர்கள்! இவ்வளவும் என்னைக் காண்பதற்காகவன்றோ! இந்த முயற்சியில் இந்த தியானத்தில் ஆயிரத்தில் ஒரு பங்கு ஸ்ரீராமனுக்காகச் செய்திருந்தால் இந்நேரம் ஸ்ரீராம பிரானையே நேரில் சேவித்திருக்கலாமே!' என்று அவள் இவரை நோக்கிக் கூறவும், அந்த க்ஷணத்திலேயே இவருடைய மனம் மாறியது தன் மனைவியின் சொல்லின் தத்துவத்தை உணர்ந்து "மாற்பால் மனஞ் சுழிப்ப மங்கையர் தோள்கை விட்டு" நூற்பால் மனம் வைக்க, காசியை நோக்கிக் கிளம்பினார். காசியில் துளசிதாஸர் ராமாயண காவியத்தை இயற்றுகையில் அவர் ஏட்டில எழுதி வைத்த ஸ்லோகங்கள மாயமாய் மறைந்தன என்றும் அதன் காரணத்தை கண்டறிய தூங்காமல்விழித்திருந்த துளசிதாஸர் முன்பு காசி விஸ்வநாதர் தோன்றி "ஓ துளசிதாஸ்! வடமொழியில் அற்புதமாக வால்மீகி பகவான் ஸ்ரீராமாயணம் இயற்றிருக்கையில் நீர் மீண்டும் வீணாக தேவபாஷையில் ராமாயணத்தை எழுதாதே! பிராந்திய மொழியான ஹிந்தியிலேயே எழுதும். எனக்கும் பார்வதிக்கும் இடையே நடந்த சம்பாஷண (உரையாடல்) ரூபமான ராமாயணம் என்னருளால் உனக்கு ஸ்புரிக்கட்டும்!" என அருள் புரிந்ததாகவும் அதன பின்பு ஹிந்தி மொழியிலேயே அவர் ராமாயணத்தை இயற்றியதாகவும் அவருடைய சரிதத்தில் தெரிவிக்கப்பட்டுள்ளது.

திரு. ஆர். வி. ஸ்ரீதர ராமாநுஜன்
மதுரை.

பிரம்மதேவரின் கிருபையால் வால்மீகி பகவான் ஸ்ரீராமாயணம் இயற்றியது போல ஈசனின் அருளால் துளசிதாஸர் "ராம சரித மானஸை" இயற்றியுள்ளார்.

இந்நூலில் ஸ்ரீராம நாம சங்கீர்த்தனத்தின் இனிமையும், பெருமையும், ஸத்சங்கத்தின் அருமையும், உயர்வையும் வாய்ப்புள்ள இடத்தில் தவறாமல் சொல்லியுள்ளார் என்பதே இதன் சிறப்பம்சமாகும்.

ஸ்ரீராமாயணத்தில் போலவே இதில் 7 காண்டங்கள் அமைந்துள்ளன. யுத்த காண்டம் என்பதற்கு பதிலாக லங்கா காண்டம என பெயரிட்டுள்ளார்.

வால்மீகி வேதம், பிரம்மா, சிவன் பார்வதி, தேவதைகள் அனைவரையும் வணங்கிய பின்பு பால காண்டத்தை தொடங்குகிறார்.

ஸ்ரீராம சரிதத்தைச்சொலலுமாறு கேட்ட உமையை நோக்கி சிவபிரான் கூறுகிறார்.

## விண்ணப்பம்

தி. தி. தேவஸ்தான கோயில்களில் மற்றும் திருமலை ஸ்ரீ வேங்கடேஸ்வரா கோயிலில் நடைபெறும் ஆர்ஜித சேவைகளுக்காக அனுப்பப்படும் கட்டணத் தொகையினை தேசீயமாக்கப்பட்ட வங்கிகளில் மட்டுமே பெறப்பட்ட 'டிமாண்ட் டிராஃப்ட்' (D. D) அல்லது 'பேஆர்டர்' (Pay order) மூலமாக அனுப்புமாறு பக்தர்கள் கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள். 'செக்' (Cheque)குகளை அனுப்பவதால் கால விரயமும், நிர்வாகச் சிக்கலும் மேலாண்மைக்கு ஏற்படுகின்றது என்பதைத் தெரிவித்துக் கொள்கின்றோம்.

"கரி ப்ரணாம் ராம்ஹி திரிபுராரி|
ஹர்ஷி ஸுதா ஸமகிரா உசாரி
தன்ய தனய கிரிராஜ குமாரி ||
தும்ஹ ஸமான நஹீ கோயிஉபகாரி ||

(திரிபுராரியான சிவன் ஸ்ரீராம பிரானை வணங்கிவிட்டு பெரும் ஆனந்தத்துடன் மதுரமான குரலில் "ஹே மலையரசன் மகளாகிய பார்வதி ! நீ தன்யை தன்யை. உன்னைப் போல எனக்கு உபகாரம் செய்வாருண்டோ?) என பால காண்டம் ஆரம்பிக்கிறது

ஏழு காண்டத்திலும் ஸ்ரீராமனுடைய குலதெய்வமாக எந்த தெய்வத்தையும் குறிப்பிடவில்லை என்றபோதிலும், உத்தரகாண்டத்தில் ஸ்ரீராமபிரானுடைய பட்டாபிஷேகம் நடந்து முடிந்த பின் அதனைக் காணவந்த அனைத்து தேவர்களும் தனித்தனியாக ஸ்ரீராம பிரானைத் துதித்துவிட்டு சென்றதாக காகபுசுண்டி கருடனிடம் தெரிவிப்பதாக உமையிடம் சிவன் தெரிவிக்கிறார். அதில் சிவபிரான் ஸ்ரீ ராமபிரானைக் குறித்து செய்த ஸ்தோத்திரத்தின் கடைசியில் ஸ்ரீ ராமபிரான் விளிக்கையில் "ஓ திருவரங்கா!" என்றே விளிப்பதன் மூலம் ஸ்ரீராம பிரானுக்கும் அவனுடைய குலதெய்வமான ஸ்ரீரங்கநாதனுக்கும் பேதமில்லை என்பதை சிவபிரான் மூலமாகவே துளசிதாஸ் நமக்குத் தெரிவிக்கிறார்.

ஸ்ரீராமபிரானை நோக்கி சிவபெருமான் செய்த ஸ்தோத்ரத்தை இனிக் காண்போம்!

ஜய ராம ரமா ரமணம் ஸமனம் |
பவ தாப பயாகுல் பாஹி ஜனம ||
அவதேஸ் ஸுரேஸ் ரமேஸ் விபோ |
ஸரணாகத் மாகத் பாஹி ப்ரபோ ||

(ஓ ராமா! ஓ ரமா ரமணா! (லக்ஷ்மீ காநதா) ஜனன மரணமாகிய ஸம்ஸார தாபத்தை நாசம் செய்பவனே, உமக்கு வெற்றி உணடாகட்டும் ! சரணாகதனும் உங்கள் சேவகனுமாகிய என்னை ரக்ஷியுஙகள் ! ஓ தேவர் தலைவனே! ஓ ரமா பதியே! ஓ தேவர் தலைவனே! ஓ விபுவே! (பெரியவனே) நான் தங்களை சரணமடைந்தேன் என்னை ரக்ஷியுஙகள்)

தஸ ஸீஸ பினாஸன் பீஸ புஜா |
க்ருத தூரி மஹா மஹி பூரி ருஜா ||
ரஜ் நீசர பருந்த் பதஙக் ரஹே |
ஸர பாவக் தேஜ ப்ரசண்ட் தஹே ||

(பத்து தலைகளும், இருபது கைகளும் கொணட இராவணனை நாசம் செய்து பூமிக்கு நேர்ந்த மிகப்பெரிய கஷ்டத்தைப்போக்கிய ராமபிரானே! ராக்ஷஸ ஸமூஹக் காடானது தங்களுடைய பாண ரூபமான அக்னியால் கொளுத்தப்பட்டது.)

மஹி மண்டல மண்டன சாருதரம் |
க்ருத சாயக் சாப நிஷங்கபரம் ||

மத மோஹ மஹா மமதாரஜநீ |
தம புஞ்ஜ் திவாகர தேஜ அநீ ||

(தாங்கள் உலகத்திற்கெல்லாம் மிகவும அழகான ஆபரணமாவீர்! தாங்கள சிறந்த பாணமும, வில்லும தரிததுவிளங்குகிறீர்! பெருந திமிரும் மோஹமும, மமதா ரூபமான இரவின் இருட்டைப் போக்குமவர்! தாங்கள் சூர்யனுடைய கிரண ஸமூஹத்தின் (தேஜஸ்) ஒளியாவீர்)

மநஜாத கிராத நிபாதகிஏ |
மருக லோக குபோக ஸரேந்ஹிஏ ||
ஹதி நாத அநாதனி பாஹி ஹ ர |
பிஷயா பந பாவர் பூலி பரே ||
பஹு ரோக பியோகந்ஹி லோக் ஸஏ |
ப்வதங்கிரி நிராதர் கே பல் ஏ ||
பவ ஸிந்து அகாத பரே நர தே |
பத பங்கஜ் ப்ரேம் ந ஜே கர்தே ||

(உலக மக்கள் பல விதமான நோயினாலும், மேலும் துக்கத்தினாலும் மடிந்து கொண்டுள்ளனர். இதற்குக் காரணம் அவர்கள் தங்களுடைய திருவடிகளை பற்றாததன் பலனாகும். எவனொருவன் தங்களுடைய திருவடித் தாமரைகளில் பக்தி செலுத்துவதில்லையோ அவன் ஸம்ஸாரமாகிற பெருங்கடலில் அமிழ்கிறான்)

அதி தீன மலீன துகீத நிதஹீம் |
ஜின்ஹ கே பத பங்கஜ் ப்ரீதி நஹீ ||
அவலம்ப பவந்த கதா ஜின்ஹ கே |
பரிய ஸந்த அநந்த ஸதா தின்ஹ கே||

(தங்களுடைய திருவடித் தாமரைகளில் அன்பு செலுத்தாத எவரும், தினமும் மிகவும் தீனமாகவும், மலினமாகவும் மேலும் துக்கத்தையும அநுபவிப்பார்கள். மேலும் தங்களுடைய லீலா கதைக்கு ஆதாரமாக இருப்பவர்கள் யாவரோ அவர்களுக்கு ஸத்துக்களும், பகவானான தாங்களும் எப்பொழுதும் ப்ரியத்தை செய்கிறீர்கள் (அவர்கள் மற்றவர்கள் போல கஷ்டப்படுவதில்லை.)

(36-ம் பக்கம் பார்க்க)

# சுதர்சனம்

திரு. எம். இராஜகோபாலன்,
சென்னை-90.



சக்கரத்தாழ்வார் - திருமோகூர்.

'நீல நிறத்தழகர் ஐம்படையின் நடுவே
நின்கனி வாயமுதம் இற்று முறிந்து
விழ'

—பெரியாழ்வார்.

மகாவிஷ்ணு தரித்துள்ள ஆயுதங்களுள் சங்கு, சக்கரம், கதை, வில், வாள் ஆகிய ஐந்தும் மகிமை வாய்ந்தன. அவற்றை ஐம்படைகள் என்று சிறப்பாக அழைப்பது வழக்கம். அவற்றுள் சங்கு பாஞ்சஜன்னியம் எனவும், கதாயுதம் கௌமேதகி எனவும், வில் சாரங்கம் எனவும், வாள் நாந்தகம் என்றும் பெயர் பெற்றுள்ளன. இவை போலவே சக்கரம் சுதர்சனம் என்ற திருநாமத்தைப் பெற்றுள்ளது. படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய முத்தொழில்களுள் உயிர்களைக் காக்கும் பொறுப்பு விஷ்ணுவைச் சார்ந்தது. இத்தொழிலைப் புரியும்போது திருத்த இயலாத தீய சக்திகளை அழிக்க வேண்டிய அவசியம் ஏற்படுகிறது. தீய சக்திகளை ஒடுக்கும் பொருட்டே மகாவிஷ்ணு ஐம்படைகளைத் தரித்துள்ளார்.

திருமாலின் வலக்கரத்தில் காணப்படும் சக்கரத்தில் உறையும் தேவன் சுதர்சனம் எனப்படுகிறார். பஞ்சாயுதங்களுக்கும் அரசனாக விளங்குவதால் அவருக்கு ஹேதிராஜன், சுதர்சன ராஜன் ஆகிய பெயர்கள் வழங்குகின்றன. திருமாலின் பஞ்சாயுதங்களில் ஒன்றான சக்கரத்திற்கு உரிய சுதர்சனர் உக்கிர வடிவினராவார். இவரே சக்கரத்தாழ்வார், சக்கர ராஜர் என வழிபடப்படுகிறார். முருகன் கரத்திலுள்ள வேலாயுதத்தை முருகப்பெருமானாகவே வழிபடுவது போலவே சக்கரத்தையும் மகாவிஷ்ணுவாகவே கருதி வழிபட வேண்டும்.

சக்ரவழிபாடு தொன்மையும், பெருமையும்மிக்கது.ஆகமங்களில் இவ்வழிபாடு இரகசியமானது என்ற கருத்து உள்ளது. சிவபெருமானைச் சக்கரத்தில் நிறுத்தி வழிபடுவதைச் 'சிவ சக்கரவழிபாடு' எனவும், அம்பாளைச் சக்கரத்தின் நடுவில் வைத்துப் பூசிப்பது 'ஸ்ரீ சக்கர வழிபாடு' எனவும் கூறப்படும். பௌத்தர்களும் ஞானம், தர்மம் ஆகியவற்றை வெளிப்படுத்தும் தர்மச் சக்கரத்தை மேன்மையுடன் போற்றுவது உண்டு. இதைப் போலவே சுதர்சன வழிபாடும் மேன்மையும், நன்மையும் அளிக்கவல்லது.

தீவிரமாக யோக மார்க்கத்தில் ஆராதனை செய்வோர் தாங்கள் வழிபடும் தெய்வத்தை யந்திர வடிவில் நிலைநாட்டிப் பூசிப்பதே வழக்கம். சுதர்சன வழிபாட்டிலும் யந்திர வழிபாடு உன்னதமானது. சுதர்சன சக்கரத்தின் யந்திர அமைப்பும் இரண்டு



சிற்ப வடிவில் சுதர்சனம் - தாடிக்கொம்பு

வகைகளைக் கொண்டது. செப்பினால் செய்யப்பட்ட தகட்டில் வரி வடிவில், முக்கோணம், ஷட்கோணம் போன்ற கோண வடிவில் சுதர்சனரின் உருவை நிலைநிறுத்தி வழிபடுவது முதல் வகையாகும். சக்கரத்தில் சுதர்சனரின் உருவை உள்ளடக்கிய விக்கிரக வழிபாடு இரண்டாம் வகையாகும். இந்த இரண்டு வழிகளிலும் முறைப்படி யந்திர வழிபாடு புரிய இயலாதவர்கள் தங்களது மனக் கண்ணில் சுதர்சன யந்திரத்தை நிலை நிறுத்தியவாறு சுதர்சன மந்திரங்களை உள்ளம் ஒன்றியவாறு உச்சரித்தால் உரிய பலன்களை அடையலாம்.

சக்கரத்தாழ்வாரின் வடிவமைப்பு பற்றிய விரிவான விளக்கங்களைச் சிற்ப நூல்களில் காணலாம். சக்கரம் திருமாலின் அம்சத்தைப் பெற்றிருப்பதாக இவை கருதுவதால் சுதர்சனரைச் 'சக்கர ரூபி விஷ்ணு' எனக் குறிப்பிடுகின்றனர். "உருண்டை விழிகளுடனும், தொங்கும் திருவயிறுடனும், காட்சியளிக்கும் ஆண் வடிவமே சக்கர புருஷன்; அவரது உடலில் பற்பல ஆபரணங்கள் ஒளியூட்டும்; திருக்கரத்தில் சாமரம் காட்சி தரும்; மகாவிஷ்ணுவை வாஞ்சையுடன் அவர் நோக்குவார்; சக்கர புருஷரின் திருமுடி மீது திருமாலின் கரம் பதிந்திருப்பது போல் தோன்றும். இவையே 'விஷ்ணு தர்மோத்தரம்' என்ற நூலில் சக்கரத்தாழ்வார் பற்றிக் காணப்படும் விவரங்கள்.

சுதர்சனத்தின் உருவமைப்பைச் 'சில்பரத்தினம்' என்ற நூல் விரிவாகக் கூறுகிறது. சக்கர ரூபியான விஷ்ணுவின் கரங்களில் சக்கரம், கதை, சர்ப்பம், பத்மம், பாசம், அங்குசம் போன்ற பொருட்கள் இடம் பெறும். அக்கினிப் பிழம்பு போலத் தோன்றும் அவரது ஜடை இருபது பின்னல்களாகப் பின்னப்பட்டிருக்கும். அவரது உடல் சூரியன் போல ஒளி வீசி மூவுலகங்களுக்கும் ஒளி வழங்கும். அச்சத்தைத் தோற்றுவிக்கும் உக்கிரப் பார்வையுடன் அவர் தோன்றுவார்.

மற்றொரு சிற்ப நூலில் மகாவிஷ்ணுவின் உக்கிரவடிவின் பிரதிபலிப்பாக சுதர்சனர் விளங்குவதாகக் கூறப்பட்டுள்ளது. அவரது பதினாறு கரங்களில் சக்கரம், சங்கு, வில், பரசு, வாள், பாணம், சூலம, அங்குசம், அக்கினிப் பிழம்பு, கடகம், கேடகம், ஹாலம், கதை, குண்டம் போன்ற பொருட்கள் துலங்கும். ஒளி வீசும் சடையும், மூன்று கண்களும், பொன் நிற உடலும் அவருக்கு உரியன. ஷட்கோண சக்கரத்தின் பின்புறத்தில் இத்தகையதோற்றத்தையுடைய சக்கரத்தாழ்வார் அமர்ந்திருப்பார். சக்கரத்தின் பின்பகுதியிலுள்ள திரிகோணச் சக்கரம் என்ற முக்கோணத்தில் யோக நிலையில் அமர்ந்துள்ள நரசிம்ம மூர்த்தியைக் காணலாம். அவரது கால்கள் வளைந்து பின்னப்பட்ட நிலையில் தோன்றும். இரு கரங்களும் முழக்காலின்மீது அழுந்தியிருக்கும். கரங்களில் சங்கும், சக்கரமும் திகழும். நெருப்புப் போல ஒளி விடும் அம்முகத்தினைச் சுற்றிலும் தீப்பிழம்பு ஜகத்ஜோதியாகப் பிரகாசிக்கும். கதிரவன், திங்கள், நெருப்பு ஆகிய மூன்றும் அவரது கண்களாக விளங்குகின்றன. கூரிய ஒளிவிடும் நகங்கள், நீண்டுள்ள நாக்கு, வலிமை மிக்க துதிக்கை ஆகியன காண்போரைத் திகிலடையச் செய்யும்.

சுதர்சன வழிபாட்டுடன், நரசிம்மரின் வழிபாடும் இணைந்துள்ள உண்மையை இவ்வுருவமைப்பு உணர்த்தும். சுதர்சனர், நரசிம்மர் ஆகிய இருவருமே உக்கிரம் மிக்க தெய்வங்களாக உள்ளனர். இருப்பினும் தீவிரமான வழிபாடு மூலம் இவற்றையும்

கருணைக்கடலாக அருள் புரியச் செய்ய இயலும்.

அஹிர்புத்திய சம்ஹிதையில் சக்கரத்தாழ்வாரின் பெருமை பரவப் பட்டுள்ளது. பரப்பிரம்மம் தானே உலகில் வியாபித்து அண்டசராசங்களைப் படைக்கத் திருவுளம் கொண்டார். அழிவில்லாத இந்த நினைவே சுதர்சனம் என்று இந்நூல் குறிப்பிடுகிறது. தீமைகளை அடியோடு அழிக்கும் வல்லமை இதற்கு உண்டு என நூல்கள் உரைக்கின்றன.

சுதர்சனர் சம்பந்தப்பட்ட பல சம்பவங்கள் நமது புராணங்களிலும், இதிகாசங்களிலும் இடம் பெற்றுள்ளன. அம்பரீஷன் எனும் மன்னன் மாபெரும் ஞானியுமாவான். சுதர்சனத்தை முறைப்படி அவன் பூசித்து வந்தான். தசமியன்று இரவு உபவாசம் இருந்து, ஏகாதசியன்றும் உணவு உட்கொள்ளாமல், துவாதசியன்று பாரணை செய்ய வேண்டுமென்பதே அவனது விரதம். அம்பரீஷனின் பக்தியை சோதனை செய்ய எண்ணம் கொண்ட துர்வாச முனிவர் துவாதசியன்று தனது சீடர்களுடன் அவனை நாடினார். முனிவரை அம்பரீஷன் வரவேற்று உபசரித்தான். முறைப்படி ஸ்நானம் செய்த பின் பாரணைக்கு வருமாறு இறைஞ்சினான். முனிவரும் ஒப்புக்கொண்டார். ஸ்நானம் செய்யச் சென்ற முனிவர் நெடுநேரம் ஆகியும் திரும்பவில்லை. துவாதசி முடியும் தருவாய் ஆகிவிட்டதால் விரத பங்கம் ஏற்படும் என அம்பரீஷன் அஞ்சினான். வேத விற்பன்னர்களின் ஆலோசனையின் பேரில் துளசியுடன் நீரை அருந்தி, விரதத்தைப் பூர்த்தி செய்தான். கால தாமதமாக அங்கு வந்த துர்வாசர் தன்னை அவமதிப்பதற்காகவே அரசன் பாரணையை முடித்துவிட்டதாக எண்ணி வெகுண்டார். அவரது திருமுடியிலிருந்து ஒரு பூதம் உற்பத்தியாகி அம்பரீஷனைத் துரத்தியது. தனது பக்தனைக் காக்க சுதர்சனம் முன்னின்று பூதத்தை விரட்டிவிட்டது. பின்னர் பூதத்தை ஏவிய முனிவரையே துரத்தத் துவங்கியது. சுதர்சனத்தின் பிடியிலிருந்து மும்மூர்த்திகளாலும் துர்வாசரைக் காக்க முடியவில்லை. இறுதியில் அம்பரீஷனையே துர்வாசர் சரணடைந்து, தன்னைக் காப்பாற்றுமாறு வேண்டினார். அம்பரீஷனும் முனிவரை விட்டு விலகுமாறு சுதர்சனரைத் துதித்தான். அம்பரீஷன் இயற்றிய பாடல்கள் 'ஸ்ரீமகா சுதர்சன துதி' என்ற பெயருடன் பக்தர்களால் பெரிதும் ஆராதிக்கப்படுகின்றன.

மகா பாரதத்திலும், பாகவதத்திலும் ஸ்ரீகிருஷ்ண பரமாத்மா சக்ராயுதத்தைப் பலமுறை உபயோகப்படுத்தியுள்ள சம்பவங்கள் குறிப்பிடப்பட்டுள்ளன. பாணாசுரன் போன்ற அசுரர்களை ஒடுக்கவும், சிசுபாலனை வதை புரியவும் சுதர்சனம் உபயோகப்படுத்தப்பட்டது. குருக்ஷேத்திரத்தில் அர்ச்சுனன் போர் புரியும் விதத்தில் நம்பிக்கை இழந்த கண்ணன் சக்ரதாரியாக, வெளிப்பட்டு பீஷ்மரை எதிர்க்கத் துணிந்த போது அர்ச்சுனன் அவரைச் சமாதானப்படுத்தினான். சுதர்சனமே சூரியனை மறைத்து, அஸ்தமனம் ஆகிவிட்டது போன்ற உணர்வை ஏற்படுத்தி, ஜயத்ரதன் வதத்திற்கு அடிகோலியது.

வாமன அவதாரத்தின் போது சுதர்சனமே வாமனமூர்த்தியின் கரத்தில் பவித்திரமாக இடம் பெற்றது. மூன்றடி நிலத்தை அளிக்க முன்வந்த மகாபலியை வண்டு உருவில் தடை செய்யச் சுக்கிராச்சாரியார் முனைந்தபோது பவித்திரமாக மாறி



சக்ரபாணி - கும்பகோணம்



சுதர்சன சக்கரத்தின் இருபக்கங்கள் - தாடிக்கொம்பு

யிருந்த சுதர்சனமே சுக்கிரரின் கண்களைப் பறித்தது.

திரிகூடமலையில் மஹாசர்த்தன் என்ற முனிவர் தீவிரமான தவத்தில் ஈடுபட்டிருந்தார். அவரது தவத்தைக் கலைக்கும் எண்ணத்துடன் இந்திரன் ஒரு யானை வடிவெடுத்து, யானைக் கூட்டங்களுடன் அவரை அணுகினான். முனிவரும் யானை வடிவெடுத்து அவற்றுடன் சில காலம் விளையாடினார். குளத்திலுள்ள தாமரை மலர்களைப் பறித்து மகாவிஷ்ணுவிற்கும் அர்ப்பணிப்பது அவரது வழக்கம். ஒரு முறை தாமரை பறிக்கச் சென்ற யானையின் காலை ஒரு முதலை பற்றியது. முதலையின் பிடியிலிருந்து தப்பிக்க முடியாத யானை மகாவிஷ்ணுவை நோக்கி 'ஆதிமூலமே' என்று கதறியது. மகாவிஷ்ணுவும் சுதர்சனத்தை விடுத்து அந்த முதலையை அழித்தார். இச்சம்பவத்தை அருணகிரிநாதரின் திருப்புகழ் பாடல் ஒன்று பாராட்டுகிறது.

"மதசிகரிகதறி முத லைகவர்
தரநெடிய
மடுநடுவில் வெருவியொரு விசை
ஆதிமூலமென
வரு கருணை வரதன்".

கயிலையில் வீற்றிருந்தபோது பரமசிவன் பார்வதியிடம் சுதர்சன மந்திரத்தைப் பாராயணம் செய்பவருக்குக் காரிய சித்தி கிடைக்கும் என்று அருளியதாக ஸம்ஹிதை நூல் ஒன்று செப்புகிறது.

வைணவ ஆலயங்களில் சுதர்சன ஆழ்வாருக்குத் தனி சந்நிதிகள் அமைந்துள்ளன. சுதர்சனர் எட்டு, பதினாறு அல்லது 32 கரங்களுடன் கோயில்களில் வீறு கொண்டு தோற்றம் கொண்டுள்ளார். அறுகோண வடிவில் இத்தகைய தோற்றத்துடன் காட்சியளிக்கிறார். இவை அனைத்திலும் மகாவிஷ்ணுவின் போர்க்கோல வடிவமே உயர்ந்தோங்கியிருக்கக் காணலாம்.

காஞ்சி மாநகரிலுள்ள அஷ்டபுஜ பெருமாள் சுதர்சன வடிவினராகவே கருதப்படுகிறார். அண்மைக் காலத்தில் வாழ்ந்த சேஷாத்திரி சுவாமிகள் என்ற மகான் இக்கோயிலில் பெரும் ஈடுபாடு கொண்டு பூசித்து அருள் பெற்றார்.

கும்பகோணத்தில் சக்கரபாணி கோயில் மிகவும் பிரசித்து பெற்றது. இங்கு மூலவர் சக்கரபாணி என்ற பெயருடன் காட்சியளிக்கிறார். தாமரைப்பூச் சக்கரத்தில் அடியும், முடியும் தொடுமாறு, அறுகோணத்தின் கீழுள்ள முக்கோணத்தில் திருவடியும், மேலுள்ள முக்கோணத்தில் திருமுடியும் பொருந்துமாறு காட்சி தருகிறார். எண் கரங்களிலும் சங்கு, சக்கரம், வில், கோடாரி, உலக்கை, கதை, மண் வெட்டி, தாமரை ஆகிய பொருட்கள் மிளிர்கின்றன. மூலவர் நின்ற கோலத்தில் காட்சியளிக்கிறார். மார்பில் அளவற்ற ஆபரணங்கள் பொருந்தியுள்ளதால் இவர் மோகன ரூபியாகத் தோன்றுகிறார். சக்ரபாணிக்கு ருத்ராம்சம் அதிகமாக இருப்பதால் வில்வத்தால் அர்ச்சனை செய்வது வழக்கம். உயிர் நீத்தவர்களுக்குரிய சடங்குகளைப் புரிய முனைபவர்கள் முதலில் இக்கோயிலில் உள்ள சக்கரதீர்த்தத்தில் நீராடிச் சக்கரபாணியை ஆராதித்த பின்னரே சடங்குகளைத் துவங்குவார்கள். சக்கரபாணி சூரியனைக் கர்வபங்கம் செய்ததாகவும், சூரிய பகவான் தனது தவறுக்குக் கழுவாயாக இக்கோயிலைக் கட்டியதாகவும் தலபுராணம் இயம்பும். இதற்கேற்ப ஆதவன் தனது ஒளிக் கதிர்களைச் சக்கரபாணி மீது செலுத்தி ஆராதிக்கிறான்.

மதுரையை அடுத்துள்ள திருமோகூர் என்ற திவ்விய தேசத்தில் அமைந்துள்ள காளமேகப் பெருமாள் திருக்கோயிலிலுள்ள சக்கரத்தாழ்வார் சந்நிதியும் அண்மைக் காலத்தில் பெரும் பிரபல்யம் அடைந்துள்ளது. பிந்துஸ்தானத்தில் பிரணவமான ஓம்காரத்தின் மத்தியில் பதினாறு கரங்களில் பலவிதமான ஆயுதங்களை ஏந்தியவாறு மூன்று கண்கள், எரிகின்ற கேசம் ஆகியவற்றுடன் ஒடும் பாவனையில் சக்கரத்தாழ்வார் காட்சி கொடுக்கிறார். பின்புறத்தில் யோக பீடத்தில் அமர்ந்துள்ள நரசிம்மர் தனது கரங்

(32-ஆம் பக்கம் பார்க்க)



ஸ்ரீரங்கநாதசுவாமி திருக்கோயில் — ஸ்ரீரங்கப்பட்டணம்

# காவிரிசூழ் ஸ்ரீரங்கப்பட்டணம்

திரு. பா. அன்பரசு
சேலம்

ஆழ்வார்களால் பாடப்பெற்றத் தலங்கள் சோழநாட்டுத் திருப்பதிகள் நாற்பதும், பாண்டிய நாட்டுத திருப்பதிகள் பதினெட்டும், மலைநாட்டுத் திருப்பதிகள் பதிமூன்றும், நடுநாட்டுத் திருப்பதிகள் இரண்டும், தொண்டை நாட்டுத் திருப்பதிகள் இருபத்திரண்டும், வடநாட்டுத்திருப்பதிகள் பனிரணடும், பரமபதம் ஒன்றும் ஆக 108 என்று வகைப்படுத்தினார்கள் வைணவப் பெரியார்கள்.

மேற்குறிப்பிட்ட தலங்களுக்குள் மைசூர் மாநிலத்திலுள்ள காவிரிசூழ் ஸ்ரீரங்கப்பட்டணம் அடங்குவதில்லை. சோழ நாட்டில் காவிரியும் கொள்ளிடமும் சூழ்ந்துள்ள அரங்கநாதப்பெருமானையும், தொண்டை நாட்டுக் கடல் மல்லையில் உள்ள தலசயனம் கொண்ட திருமேனியையும், மலை நாட்டுத் திருப்பதிகளுள் ஒன்றாக வைத்து எண்ணப்படும் திருவனந்தபுரத்தில் பள்ளிகொண்ட வடிவினையும் பாடியுள்ளார்கள் ஆழ்வார்கள். ஆனால் திருவரங்கத்தைப் போல,

> 'திருவரங்கப்பெருநகருள் தெண்ணீர்ப் பொன்னி
> திரைக்கையால் அடிவருடப் பள்ளி கொள்ளும் கருமணி'
> 'சேலார்ந்த நெடுங்கழனி சோலை சூழ்ந்த திருவரங்கம்'

என்னும் குலசேகரரின் வருணனையும்,

> 'வண்டு பாடும் மதுவார்புனல் வந்திழி காவிரி
> அண்ட நாறும் பொழில சூழ்ந்து அழகார் தென்னரங்கம்'

என்னும் நம்மாழ்வாரின் வருணனையும் மைசூர் மாநிலத்திலுள்ள ஸ்ரீரங்கப்பட்டணத்திற்கும் பொருந்தும்.

ஆங்கிலேயர் ஆட்சியின் போது 'சேரிங்கபடம்' (Seringapatam) என்று அழைக்கப்பட்டு வந்தது.

ஸ்ரீரங்கப்பட்டணம் மைசூர் நகரின் வடகிழக்கில் 16 கி. மீ. தூரத்தில் உள்ளது. பேருந்து வசதியுண்டு. தென்கிழக்குத் திசையை நோக்கி ஓடிவரும் காவிரி ஆற்றின் இடையில் இயற்கையாக அமைந்துள்ள தீவுத்திடலில் ஸ்ரீரங்கப்பட்டணம் என்னும் சிற்றூர் அமைந்துள்ளது.

நமது திருவரங்கத்தைப் போல இந்த ஸ்ரீரங்கப்பட்டணம் நகரத்தாக்கத்திற்கு அதிகம் ஆளாகவில்லை எனலாம். காவிரி நீராம் இயற்கை யரண் சூழ்ந்த இடமாக இருப்பதால் இவ்விடம் அரசர்களின் தலைமையிடமாகவும் விளங்கி வந்துள்ளது.

'ஸ்ரீரங்கப் பட்டணத்திலுள்ள அரங்கநாதப் பெருமானை நினைத்துக் காவிரி தவம் செய்தாளாம். அவளது தவத்திற்கு மெச்சி, காவிரி ஆறு என்றும் புனிதத்தன்மையுடன் இருக்கவும், ஸ்ரீரங்கப்பட்டணம் யாத்ரிகர்கள் வந்து செல்லும் இடமாக

இருக்கவும், தன்னை வணங்குபவர்களைக் காப்பதற்காக அங்கு எப்போதும் எழுந்தருள்வதாகவும் திருமால் மூன்று வரங்கள் தந்தாராம். இத்தலத்தில் உள்ள திருமாலை வழிபாடு செய்வதற்குரிய பாஞ்சராத்திர வழிபாட்டு முறையை நாரத முனிவருக்கு பிரம்மா அருளிச் செய்தாராம். துளசிச் செடிகளின் புதரில் அரங்கநாதப் பெருமாள் திருவுருவம் கௌதம முனிவரால் கண்டெடுக்கப்பட்டதாம்.

ஸ்ரீரங்கப்பட்டணம் 'கௌதம க்ஷேத்திரம்' என்றும், அரங்கநாதர் ஆலயம் 'பிரம்மானந்த விமானம்' என்றும் அழைக்கப்பட்டு வருகிறது.

பாவம் செய்த மக்கள் பலர் கங்கையில் நீராடிய காரணத்தால் கங்கை மாசடைந்துவிடதன்னைப்புனிதமாக்கிக்கொள்ள கங்கை புனிதக்காவிரியில் நீராடினாளாம். அது துலா (ஐப்பசி) மாதம் என்று சொல்லப்படுகின்றது. ஆகவே தீர்த்த யாத்திரை செய்வோர் துலாமாதத்தில் கிருஷ்ண பட்சம் (பௌர்ணமிக்குப் பிறகு) தசமி திதி அன்று (10ஆம் நாளில்) இங்குள்ள எட்டுத் தீர்த்தங்களில் நீராடினால் நன்மை உண்டாகுமென்று நம்பப்படுகின்றது.

'கங்கையினும் புனிதமாய காவேரி' என்று புலவர்கள் காவிரியைப் போற்றியது நினைவுக்கு வருகின்றது.

ஸ்ரீரங்கப்பட்டணம் என்னும் தலம் ஆதிகாலத்தில் ஸ்ரீரங்கபுரி என்றும் வழங்கப்பட்டதாம்.

புராணகாலநினைவுகளில் இருந்து ஒருவாறு மீண்டு வரலாற்றுக்காலத்திற்கு வருகிறோம். இவ்வாலயத்தின் தொடக்க காலத் திருப்பணிகளை கி. பி. 817ஆம் ஆண்டில் தேவரடியார் குலத்தில் தோன்றிய 'ஹம்பி' என்பவன் செய்தான். கி.பி. 894ம் ஆண்டுவாக்கில் இப்பகுதியை ஆட்சி செய்த கங்க வமிசத்து அரசன் திருமாலையா இக்கோயிலுக்கு நவரங்க மண்டபமும், சீனிவாசப் பெருமாளுக்கு ஒரு கோயிலும் கட்டுவித்தான்

கி.பி. 1070ஆம் ஆண்டில் சோழ நாட்டை ஆண்டுவந்த முதலாம் வீர ராசேந்திர சோழரின மகனான அதி ராசேந்திரன் வைணவப் பெரியார் இராமானுஜரைத் துன்புறுத்தி வந்தான். 'சைவ சமயத்தைவிட உயர்ந்த சமயம் உலகில் வேறொன்றுமில்லை' என்று இராமானுஜரின் வாயால் சொல்லச் செய்ய வேண்டுமென்று அவன் விரும்பினான். இம் மன்னனை வைணவர்கள் 'கிருமி கந்தசோழர்' என்று குறிப்பிடுகிறார்கள்.

கிருமிகந்த சோழரின சமய வெறியிலிருந்து விடுபட்டு இராமானுஜர்



தென்னாட்டு கோயில் தேரில் (மரவேலைப்பாடு) சிற்பக்காட்சி

திரு. எஸ். ஜி. சேஷகிரி - கோவை

தமது சீடர்களுடன் சத்தியமங்கலம் காடுகளின் வழியாக மைசூர் மாநிலத்தை அடைந்து அங்குள்ள பல வைணவ ஆலயங்களுக்குத் திருப்பணி செய்யத் தொடங்கினார். அப்போது அப்பகுதி 'பிட்டிதேவன்' என்னும் சமண சமயத்தைச் சேர்ந்த அரசனின் ஆளுகைக்கு உட்பட்டிருந்தது. பிட்டிதேவனை இராமானுசருடைய சமயப் போதனைகள் கவர்ந்தன. சமண சமயத்திலிருந்து அவன் வைணவ சமயத்திற்கு மாறினான். இவனே பிற்காலத்தில் விஷ்ணுவர்த்தனன் என்று அழைக்கப்பட்டான். இம்மன்னனின் மதமாற்றம் கி. பி. 1117ஆம் ஆண்டு வாக்கில் நடந்திருக்கலாம்.

இராமானுசர் விஷ்ணுவர்த்தனனிடமிருந்து கோயில் திருப்பணிக்காக எட்டு சிற்றூர்களையும், பொருளையும் நன்கொடையாகப்பெற்றார். பெற்ற செல்வங்களைக் கண்காணித்துக் கோயில் பூசைகள் ஒழுங்கான முறையில் நடைபெறச் சில நபர்களை நியமனம் செய்தார் இராமானுசர். இப்பணிக்காக நியமனம் செய்யப்பட்டவர்களுக்கு 'ஹெப்பர்கள்' என்று பெயர்.

கி. பி. 1457 ஆம் ஆண்டு இக்கோயில் ஹெப்பர்களில் ஒருவராக விளங்கியவர் திம்மணணா என்பவர். பிறகு இவர் விஜயநகரம் சென்று அரசவையில் உயர்ந்த பதவி வகித்தார். இவர் ஸ்ரீரங்கப்பட்டணம் கோயிலின் மதிலையும் முன்வாசலையும், கோட்டையையும் கட்டினார்.

பிறகு, இப்பகுதி விஜயநகர அரசர்களின் நேர்ப்பார்வையின் கீழ் வந்தது. ஸ்ரீரங்கராயர் என்பவர் விஜயநகர அரசின் பிரதிநிதியாக நியமனம் செய்யப்பட்டு இப்பகுதியைக் கவனித்து வந்தார். இவர் நகரை விரிவு படுத்தி, உள்திருச்சுற்றையும், பெரிய வாசலுக்குப் படிகளையும், இருபக்கங்களில் கல் சிற்ப யானைகளையும் அமைத்தார்.

ஸ்ரீரங்கராயரின் மனைவி அலர்மேல் அம்மையார் அரங்கநாதர் மேல்பெரும் பக்தி கொண்டிருந்தார். தாயாருக்குப் பலபொன் நகைகளைச் செய்து கொடுத்தார். செவ்வாய், வெள்ளிக்கிழமைகளில் அந்நகைகளைத் தாயாருக்கு அழகுபடுத்திச் சிறப்பு வழிபாடு செய்யவும் ஏற்பாடு செய்தார்.

ஸ்ரீரங்கராயர் உடல் நலமில்லாமல் போகவே கோயில் நிருவாகம் செய்வதில் தடைஏற்பட்டது. ஆகவே மைசூர் அரசர் இராஜ உடையாரை அழைத்து வரச்செய்து கோயில் பணிகளைக் கவனிக்குமாறு வேண்டினார். பிறகு தலைக்காடு என்னும் இடத்திற்கு அருகிலுள்ள மாலங்கி என்னும் அமைதியான இடத்தில் தங்கியிருந்து பிறகு உயிர் நீத்தார்.

அலர்மேல் அம்மையார் வழங்கிய நகைகளை செவ்வாய், வெள்ளிக்கிழமைகளில் தாயாருக்கு அலங்காரம் செய்யப்பட்டு மீண்டும் அந்தஅம்மையாரிடமே வழங்கப்பட்டு விடுவது வழக்கம். ஒருநாள் இவ்வாறு தாயார் அலங்காரம் நீக்கப்பட்ட பிறகு இராஜ உடையார் தரிசனத்துக்கு வந்தார். தாயார் அலங்காரம் நீக்கப்பட்டதை அறிந்து அந்நகைகளை அலர்மேல் அம்மையாரிடமிருந்து பெற்றுவர ஆட்களை அனுப்பினார்.

இதை அறிந்த அலர்மேல் அம்மையார் தாயாருக்கு வழங்கிய பொன் நகைகளை எடுத்துக் கொண்டு தலைக்காடு என்னுமிடத்திற்குச் சென்று விட்டார். அவரைப் பின்தொடர்ந்து நகைகளை மீட்டுவருவதற்காகச் சில வீரர்களும் சென்றார்கள். இதையறிந்த அலர்மேல் அம்மையார் மாலங்கி என்னுமிடத்தில் ஓடிவரும் காவிரி ஆற்றில் குதித்து விட்டார். அந்த இடம் ஆழமுடையது என்று சொல்லப்படுகின்றது.

அலர்மேல் அம்மையார் காவிரி ஆற்றில் குதிக்கும் போது 'தலைக்காடு மணல் மேடாகப் போகட்டும்; மைசூர் மன்னர்களுக்கு வாரிசு இல்லாமல் போகட்டும்' என்று சாபம் இட்டுவிட்டுக் குதித்து விட்டாராம். தனது செயலுக்காக மனம் வருந்தி அலர்மேல் அம்மையாருக்கு மைசூர் அரண்மனையில் சிலை ஒன்று அமைத்தாராம் இராஜஉடையார். இப்படி ஒரு செவிவழிச் செய்தி இவ்வூர் மக்களிடம் வழங்கப்பட்டு வருகிறது. அலர்மேல் அம்மையார் தயாருக்குக் கொடுத்த மூக்குத்திகோயிலில் இன்றும் இருப்பதாகவும் கூறப்படுகிறது.



வல்லாள மஹாராஜா கோபுரம்
திருவண்ணாமலை —சன்மிஷ்டை

திப்புவின் திருப்பணிகள் :

கி. பி. 1610ஆம் ஆண்டு முதல் 1699ஆம் ஆண்டு வரை ஸ்ரீரங்கப்பட்டணம் மைசூரின் தலைநகரமாக இருந்தது. 1761ஆம் ஆண்டு மைசூரின் அரசராக இருந்த இம்மடி கிருஷ்ணராஜ உடையார் ஹைதர் அலி என்பவரைத் தமது படைத் தலைவராக நியமித்தார்.

ஹைதர் அலியின் கனவில் அரங்கநாதர் தோன்றியதாகவும், அரங்கநாதரை வணங்கிய பிறகே ஹைதர்

(27-ம் பக்கம் பார்க்க)

சிறப்புச் செய்தி :

# அன்னமய்ய ஜயந்தி



ஸ்ரீ அன்னமாச்சார்யார்

தெலுங்கு மொழிக் கவிஞரும், ஸ்ரீ வேங்கடேஸ்வரர் மீது சுமார் 32,000 கீர்த்தனைகளை இயற்றியவரும், கி. பி 15-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவருமான ஸ்ரீ தாள்ளபாக்க அன்னமாச்சார்யாவின் 582 - ஆவது ஜயந்தி விழாவினை திருமலைத் திருப்பதி தேவஸ்தானம் பெங்களூரிலும், ஆந்திர மாநிலத்தில் பல்வேறு பகுதிகளிலும் 9-5-90முதல் 19-5-90 வரை 11 நாட்கள் வெகு விமர்சையாகக் கொண்டாடியது.

மே மாதத்தில் 9, 10 தேதிகளில் இவ் ஜெயந்தி விழாவின் துவக்க நாள் நிகழ்ச்சிகள் பெங்களூர் சௌடப்பா அரங்கில் நடைபெற்றன. தி.தி.தே. அன்னமாச்சார்யா திட்டக் குழுவின் ஒத்திசைவாளர் டாக்டர். மேடஸானி மோகன் அவர்கள் கூட்டத்தினரை வரவேற்க, ஆந்திர மாநில ஆட்சி நடுவர் மன்றத்தின் தலைவர் திரு.புட்டஸ்வாமி அவர்கள்விழாவிற்குச் சிறப்பு விருந்தினராக பங்கேற்றார். பெங்களூர் தி. தி. தே. திருமண மண்டப வட்டாரக் குழுவின் தலைவர் திரு. வி. ஆர். நாயுடு, திரு. சச்சிதானந்தம் (திருப்பதி) திரு. டி. வி. சுப்பாராவ் (பெங்களூர்) ஆகியோர் பங்கேற்று உரையாற்றினர். இவ்விரு நாட்களின் போது திருமதி. வாணி கணபதி, திரு. ஆனந்த பட்டர், திரு. ராஜ்குமார் பாரதி ஆகியோரின் இன்னிசைக் கச்சேரி நிகழ்ச்சிகளும் நடைபெற்றன.

11-5-90 மற்றும் 12-5-90 தேதிகளில் இவ் ஜெயந்தி விழாவின் இரண்டாவது கட்ட நிகழ்ச்சிகள் நிஜாமாபாத்தில் நடைபெற்றன. இவ்விழாவிற்கு மாவட்ட ஆட்சித் தலைவர் திரு டி. வெங்கடேஸ்வரலு ஐ.ஏ எஸ். அவர்கள் சிறப்பு விருந்தினராக பங்கேற்றார். இவ்இரு நாட்களின்போது திரு. முதிகொண்ட ஈஸ்வர சரண், திரு. வேமுகண்ட்டி நரசிம்மாச்சார்யலு ஆகியோரின் சமயச்சொற்பொழிவுகளும், திரு. கே. வி. கே. மோகன் ராஜு, திரு. ஜி. நாகேஸ்வர நாயுடு ஆகியோரின் இன்னிசைக் கச்சேரிகளும், திருமதி. கிருஷ்ண குமாரி அவர்களின் ஹரிகதை நிகழ்ச்சியும் நடைபெற்றன.

13-5-90 அன்று ஜெயந்தி விழா நிகழ்ச்சிகள் ஸ்ரீ அன்னமய்ய பிறந்த இடமான கடப்பை மாவட்டம் தாள்ளபாக்கம் எனும் கிராமத்தில் நடைபெற்றன. இவ்விழாவிற்கு ஆந்திர மாநில என். ஐ. ஆர். டி. (நிதி) இயக்குநர் ஏ.வி. எஸ். ரெட்டி, ஐ.ஏ.எஸ். அவர்கள் சிறப்பு விருந்தினராக பங்கேற்க தி. தி. தே. செயலாட்சித் தலைவர் திரு. எம்.வி.எஸ். பிரஸாத் ஐ.ஏ.எஸ். அவர்களும் கலந்து கொண்டார். திருமதி. எஸ். கே. மீனா குமாரி (திருப்பதி) திரு. சூர்யராவ் (நெல்லூர்) திரு. ரகுநாத், திரு. ரவி, திரு. வெங்கடசுப்பய்யா, திருமதி. பாக்யலக்ஷ்மி (திருப்பதி) ஆகியோர் பங்கேற்ற "அன்னமய்யா ஆராதனை" நிகழ்ச்சி நடைபெற்



தாள்ளபாக்கம்



பெங்களூர் ஜயந்தி விழாக்காட்சிகள்

றது. ஆந்திர மாநில திருவையாறாக தாள்ளபாக்கம் விளங்க வேண்டும் என்று சிறப்பு விருந்தினர் தம் உரையில் குறிப்பிட்டார்.

*13-5-90* மற்றும் *14-5-90* தேதிகளில் குண்ட்டூரில்நடைபெறவேண்டிய ஜயந்தி விழா நிகழ்ச்சிகள் அண்மையில் ஏற்பட்ட புயல் காரணமாக நடைபெறவில்லை.

*16-5-90* மற்றும் *17-5-90* தேதிகளில் கடப்பாவில் ஜெயந்தி விழா நிகழ்ச்சிகள் நடைபெற்றன.



திரு. எம். பாலமுரளிகிருஷ்ணா (திருப்பதியில்)

மாவட்ட ஆட்சித் தலைவர் திரு அஸ்வினி குமார் பரிதா அவர்கள் சிறப்பு விருந்தினராக பங்கேற்றார். திரு. புட்டபர்த்தி நாராயணாசாரியலு மற்றும் திரு. எல்லம்ம ராஜு ஸ்ரீநிவாசராவ் ஆகியோரின் சிறப்பு சமயச் சொற்பொழிவு நிகழ்ச்சிகளும், திரு. அன்னவரபு ராமசாமி அவர்களின் வயலின் மற்றும் பிரபல தெலுங்குத் திரைப்படப் பின்னணிப் பாடகர் திரு. வி. ராமகிருஷ்ணா அவர்களின் இன்னிசைக் கச்சேரிகளும் இவ்விரு நாட்களின்போது நடைபெற்றன.

இவ் ஜயந்தி விழாவின் இறுதி கட்ட நிகழ்ச்சிகள் *16-5-90* மற்றும் *17-5-90* தேதிகளில் திருப்பதியில் ஸ்ரீ அன்னமாச்சார்யா கலாமந்திரத்தில் வெகுச் சிறப்பாக நடைபெற்றன. டாக்டர். கே. ஜே. கிருஷ்ணமூர்த்தி, திரு.பி. ஸ்ரீநிவாசமூர்த்தி, திரு. சமுத்ரால லக்ஷ்மணய்யா மற்றும் திருமதி. ஜி. உமாதேவி ஆகியோரின் சிறப்புச்



அன்னமய்ய வம்சத்தினரை திரு. பாலமுரளிகிருஷ்ணா அவர்கள் கௌரவிக்கும்போது



விழாவின்போது வெளியிடப்பட்ட ஒலிப்பேழைகளை தி. தி. தே. செயலாட்சித் தலைவர் வழங்க எம். பாலமுரளிகிருஷ்ணா அவர்கள் பெறுகிறார்

சமயச் சொற்பொழிவுகளும், திரு. யெல்லாவேங்கடேஸ்வரராவ் அவர்களின் மிருதங்க கச்சேரி நிகழ்ச்சியும், டாக்டர். எம். பாலமுரளிகிருஷ்ணா அவர்களின் இன்னிசைக் கச்சேரி நிகழ்ச்சியும் மிகச்சிறப்பாக நடைபெற்றன.

18-5-90 அன்று பம்பாய் சகோதரிகளான திருமது. சரோஜா மற்றும் திருமதி. லலிதா அவர்கவின் இன்னிசைக் கச்சேரி நடைபெற்றது.

திருமதி எஸ்.பி. சைலஜா, திரும்தி வாணி கணபதி, திரு. எம். பாலமுரளி கிருஷ்ணா ஆகியோர் பாடிய அன்னமய்யா பாடல்களைக் கொண்ட ஒலிப்பேழைகளை தி.தி.தே. செயலாட்சித் தலைவர் அவர்கள் வெளியிட்டார். தாள்ளப்பாக்க அன்னமய்யாவின் வமிசத்தாரை தி. தி. தேவஸ்தானத்தின் சார்பில், டாக்டர். எம். பாலமுரளி கிருஷ்ணா அவர்கள் பொன்னாடைப் போர்த்திக்கௌரவித்தார்.

*

(23-ம் பக்கத் தொடர்ச்சி)

தமது செயல்களைத் தொடங்கிய தாகவும் செவிவழிச் செய்தி ஒன்று உண்டு.

ஸ்ரீரங்கப்பட்டணம் அரங்கநாதர் கோயிலின் ஒரு பகுதி கி.பி. 1764-ம் ஆண்டு தீவிபத்துக்கு ஆளாயிற்று. தீவிபத்துக்கு உள்ளான பகுதியில் தான் கோயிலின் மிகப்பெரும் உற்சவமான கொடாரோத்சவம் நடப்பது வழக்கம். விபத்துக்கு உள்ளான பகுதியை ஹைதர் ஒரு மாதத்திற்குள் பழுது பார்த்தார். இம் மண்டபம் தற்போது 'பாதாள மண்டபம்' என்று அழைக்கப்படுகிறது.

திப்புவின் அரசியல் அலுவலராக இருந்த மீர்சாதிக் என்பவர் இலட்சுமி நரசிம்மசுவாமி கோயில், சுவேத வராக சுவாமி கோயில், கங்காதர சுவாமி கோயில் ஆகியவற்றை அழித்துவிட்டதாகக் கூறப்படுகின்றது.

திப்பு சுல்தான் தமது தலைநகரமாகிய ஸ்ரீரங்கப்பட்டணம் அரங்கநாதர் கோயிலுக்கு வெள்ளியால் செய்யப்பட்ட ஏழு தீர்த்தப் பாத்திரங்கள், கற்பூர ஆரத்தி எடுக்கும் வெள்ளிக் கரண்டி ஒன்றையும் சுவாமிக்குத் தங்க நகைகளையும் காணிக்கையாக்கினார்.

தமது அரண்மனையாகிய 'தரியா தௌலத் பாக்' என்னும் மாளிகைக்கு அருகில் உள்ள நரசிம்மர், கங்காதரேசுவரர் கோயில்களில் நாள் பூசைகள் தவறாமல் நடக்க ஏற்பாடு செய்தார் ஹைதர்.

"மசூதியின் தொழுகை ஒலியை மதித்தது போலவே அரங்கநாதர் கோயிலின் மணியோசைக்கும் மதிப்பளித்து வந்தார் திப்பு. இந்தச் சான்றுகளையும், வேறு இந்துக் கோயில்களுக்கு அவர் செய்துள்ள திருப்பணிகளையும் நோக்கும் போது திப்பு இந்துக்களைப் புறக்கணித்தார் என்று ஆங்கிலேய ஆட்சியாளர்கள் இவர்மேல் பரப்பிய பொய்ப் பிரச்சாரத்தைப் பொய் ஆக்குகின்றன" — என்று டாக்டர் ஷேக் அலி "திப்புசுல்தான்" எனனும் தமது நூலில் குறிப்பிட்டுள்ளார்.



சுவாமிமலை - மேஜர்தாசன் - ஈரோடு

ஆனால் 'ஸ்ரீரங்கப்பட்டணத் தல மகாத்மியம்' என்னும் தலபுராணம் "ஆங்கிலேயருடன் சண்டை செய்து திப்பு சுல்தான் தோற்றார். ஆங்கிலேயர்களுக்கு அவர் பெருந்தொகை கப்பம் கட்டவேண்டியதாயிற்று. அவரிடம் தொகை இல்லாததால் கோவிலில் இருந்த திருவாபரணங்களை எடுத்து ஆங்கிலேயர்களுக்குக் கொடுத்தார். அவற்றுள் சில பிற்காலத்தில் பிரஞ்சுக்காரர்களின் கைக்குப் போய் அவர்களிடமிருந்து இரஷ்யர்களிடம் போய் விட்டன. அவற்றை கிரம்ளின் மாளிகையில் காணலாம்" என்று கூறுகிறது.

கி.பி. 1799ஆம் ஆண்டு ஸ்ரீரங்கப் பட்டணம் ஆங்கிலேயர் கைக்கு வந்த பிறகு மைசூர் அரண்மனை கிருஷ்ண ராஜ உடையாரின் ஆட்சிப்பொறுப் புக்கு வந்தது. நான்காம் கிருஷ்ண ராஜ உடையார் ஸ்ரீ சாமராஜேந்தி ரர் நினைவாகப் பயணிகள் தங்கு வதற்காக ஒரு சத்திரத்தைக் கட்டு வித்தார். தமது தந்தையார் நினை வாக காவிரி ஆற்றங்கரையில் பயணி கள் குளிக்கும் பொருட்டு ஒரு படித் துறையும் கட்டுவித்தார். இந்த இடத்திற்கு 'இராஜ்காட்' என்று பெயர்.

முன் கோபுரம் ஐந்து நிலைகளை யும் ஐந்து கலசங்களையும் கொண்டு அழகிய வேலைப்பாட்டுடன் விளங்

கிறது. மதில், கோட்டைச் சுவர் போன்ற அமைப்பைக் கொண்டது. திருச்சுற்று வலம் வருகிறோம். திருச்சுற்றுப் பாதையில் ஆங்காங்கே நெருஞ்சிமுள் செடிகள் பாய்விரித்துள்ளன. கால்களைக் கவனத்துடன் வைக்க வேண்டும்.

மூலத்தானத்தில் அரங்கநாதர் திருவுருவம் அரவணையில் பள்ளிக்கொண்டு தமது வலது கையைத் தலைக்கு வைத்துக்கொண்டு இடது கையை நீட்டிக் கொண்டிருக்கும்படிக் காட்சி தருகிறது. அரங்கநாதரின் உடன் அமர்ந்துள்ளபடி அமைக்கப்படும் நிலமகள், திருமகள் உருவங்கள் இங்குக் காணப்படவில்லை. அதற்குப் பதிலாக அரங்கநாதர் திருவுருவத்தின் திருவடிகளில் காவிரி அன்னையின் உருவம் கையில் தாமரை மலருடன் சிற்ப வடிவில் காட்சி தருகின்றது. காவிரி அன்னையின் வேண்டுகோளுக்கு இணங்கித் திருமால் அரங்கநாதர் வடிவில் இங்குப் பள்ளிக் கொண்டிருப்பதாக ஐதிகம்.

கோயிலுக்குள் கங்காதரர், நரசிம்மர், ஆழ்வார்கள், இலட்சுமி ஆகியோருக்குத் தனியே சன்னதிகள் உண்டு.

ஸ்ரீரங்கப்பட்டணம் அரங்கநாதர் கோயிலுக்குப்பெருமளவில் திருப்பணிகள் செய்தும் நன்கொடைகள்வழங்கியும் சிறப்பித்த திப்பு சுல்தானின் கோடை வாழிடமாகிய 'தரியா தௌலத்' என்னுமிடம் காணவேண்டிய இடமாகும். இந்தக்கட்டடமும் பெங்களூர் 'லால்பாக்'கும் திப்புவின் தகப்பனார் ஹைதர் கட்டுவித்தவை.

தரியா தௌலத் இன்று புல்வெளி, பூங்கா இவற்றினிடையில் காட்சி தருகிறது. மிகவும் எளிமையான வேலைப்பாடு கொண்டது. சுவர்களின் மேல் ஆங்கிலேயருடன் திப்பு நடத்திய போர்க்காட்சியை விளக்கும் ஓவியங்கள் தீட்டப்பட்டுள்ளன. நாளெல்லாம் பார்த்துக் கொண்டிருக்கலாம்.

திப்பு பயன்படுத்திய ஆயுதங்கள் அவருடைய குடும்பத்தினர் உருவங்களை விளக்கும் ஓவியங்கள், காசுகள், உடைகள் சுற்றுலாப் பயணிகளின் காட்சிக்காக இங்கு வைக்கப்பட்டுள்ளன. திப்பு அரங்கநாதர் கோயிலுக்கு வழங்கிய வெள்ளித் தீர்த்தக் கிண்ணங்களை இங்குக் காணலாம்.

திப்பு மரணம் அடைந்ததாகக் கூறபடும் இடத்தில் ஒரு கல் நடப்பட்டுள்ளது. இங்கிருந்துதான் இறக்கும் தருவாயில் கிடந்த திப்புவை எடுத்துச் சென்றார்களாம்.

ஸ்ரீரங்கப்பட்டணத்தில் காணத்தக்க மற்றொரு இடம் 'கும்பாஸ்' என்னுமிடம் ஆகும். இங்கு ஹைதர், திப்பு மற்றும் அவருடைய குடும்பத்தாரின் சமாதிகள்காணப்படுகின்றன. இஸ்லாமிய கலைப் பாணியில் இவ்விடம் சிறந்த வேலைப்பாடமைந்த மினாராக்களுடன் கட்டப்பட்டுள்ளது.

சமய நோக்கில் திப்புவைக் குறை கூறுபவர்களும் உண்டு. மாலிக்காபூரின் செயல்கள் வேற்றுச் சமயத்தவர்களையும்திப்புவையும் வெறுக்கும்படி செய்துவிட்டன போலும். ஆனால் திப்பு-சிருங்கேரி சங்கராச்சாரியார் தொடர்பும், சாரதா பீடம் கோயிலுக்கும், பிற இந்து சமயக்கோயில்களுக்கும் வழங்கிய கொடைகளும் அவர் சமயப் பொதுமை கொண்டவர் என்பதைக் காட்டுகின்றன.

திப்பு சுல்தான் நஞ்சன்கூடு கோயிலுக்குக் காணிக்கையாகக் கொடுத்த பச்சை ஆரத்தில் திப்புவின் அரசியல் சின்னமாகிய சந்திரப் பிறையையும், நட்சத்திரத்தையும் இன்றும் காணலாம். அதே கோயிலில் அம்மன் சன்னதிக்கு இடதுபக்கம் பிரதிஷ்டை செய்துள்ள பச்சைக்கல் லிங்கம் திப்புவின் நன்கொடை ஆகும்.



ராமேஸ்வரம் திருக்கோயில்

இதே போல திப்பு தமிழகத்திலுள்ள பலகோயில்களுக்குக்கொடுத்த கொடைகள் பல. அவற்றைப் பட்டியல் இட்டால் அது தனிக்கட்டுரை ஆகிவிடும். கோயில் அர்ச்சகர்கள் அவர் அளித்த கொடைகளைப் பற்றிப் பெருமையாகச் சொல்லி அப்பொருள்களையும் நமக்குச் சுட்டிக் காட்டுகிறார்கள்.

போர்க்காலங்களில் சில கோயில்களை திப்பு இராணுவத்தினர் முகாமாகப் பயன்படுத்தி இருக்கலாம். காரணம் மதில்களின் பாதுகாப்புக்குத்தான். அவருடைய தளபதிகள் சிலர் பிற சமயச் சின்னங்களைச் சேதப்படுத்தியிருக்கலாம். ஸ்வார்ட்ஸ பாதிரியார் திப்புவின் சமயப் பொறையைப் பற்றிக் குறிப்பிடும் போது, "ஹைதர் தனக்கென ஒரு சமயத்தைக் கொண்டிருக்கவில்லை. தனது ஆளுகைக்கு உட்பட்ட நாட்டுமக்கள் ஒவ்வொருவரும் தாம் விரும்பும் சமயத்தைச் சார்ந்திருக்கலாம் என்று அவரவர் விருப்பத்திற்கு விட்டுவிட்டார்" என்று கூறியுள்ளார்.





# திருமூலர்

புலவர் மு. மணி,
வேலூர்.

செந்தமிழ் மொழியில் திருமுறைகள் பனனிரண்டில் பத்தாம் திருமுறையாகத் திகழ்ந்து பல்லோராலும் படித்துப் பாராட்டப்படும் சிறப்பையுடையது "தமிழ் மூவாயிரம்" என்ற திருமந்திர நூலாகும். தமிழ் மூவாயிரம் என்பதே திருமூலர் நூலுக்கு இட்ட சிறந்த பெயராகும். திருமந்திரம் என்ற நூல் இயற்றுவதற்கு முன் உபதேசம் முப்பது, மந்திரம் முந்நூறு ஆகிய இரு நூல்களையும் திருமூலர் இயற்றியுள்ளார். திருமூலர் இயற்றிய தமிழ் மூவாயிரம் என்ற நூலுக்குத் திருமந்திரம் எனப்பெயர் வரக்காரணம் யாதெனில்,

"நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த
மறைமொழி தானே மந்திரம் என்ப"

என்ற தொல்காப்பியர் சூத்திரப்படி நிறைமொழி மாந்தராகிய திருமூலநாயனாரால், சிவபெருமானது திருவருட் குறிப்பெண்ணும் ஆணையால் "மறைப் பொருள்" கூற்றுக்களை உடைய செய்யுட்களால் தமிழ்மூவாயிரம் ஆக்கப்பட்டிருப்பதால் திருமந்திரம் என்று சிறப்பித்துப் பெயர் வழங்கப்பட்டுள்ளது. இத்திருமூலர் அறுபத்து மூன்று நாயன்மார்களில் ஒருவராதலால் திருமூலநாயனார் என்று பாராட்டப்படுகிறார்.

**திருமூலர் வரலாறு :**

திருமூலருடைய இயற்பெயர் சுந்தரநாதர் என்பதாகும். இவர் பிறந்த இடம் கடலால் அழிந்துபோன கபாடபுரத்திலுள்ள பாண்டிய நாடு என்பதாகும். இவர் பொதிய மலைத் தமிழ்ச் சங்கத்தில் உலக நூல்களைக் கற்றுத்தேர்ந்து, குறுமுனிவருடைய நட்பைப் பெற்று, வடகயிலைக் குருகுலத்தில் சேர்ந்து அறிவு நூல்களைப் படித்து அவைகளிலும் தேர்ந்து, நந்தி யெம்பெருமான் திருவருள் பெற்றவர். சுந்தரநாதராகிய திருமூலருடன் குருகுல வாசம் செய்து கொண்டு கற்றவர்கள் 1). சனகர், 2). சனந்தர், 3). சனாதனர், 4). சனற்குமாரர், 5). சிவயோக மாமுனி, 6). மன்று தொழுத பதஞ்சலி, 7). வியாக்கிரமர் ஆகிய 7 பேர்களாவர். வடகயிலைக் குருகுலத்தில் குருகுலம் முடிந்ததும் சுந்தரநாதரும், பதஞ்சலியும், வியாக்கிரமரும் கயிலையிலிருந்து புறப்பட்டுச் சிதம்பரம் வந்து ஆசிரமங்கள் அமைத்துக் கொண்டு நடராஜரின் நடனத்தைக் காணவேண்டித் தவம் செய்தனர். ஒருநாள் அவர்கள் விருப்பப்படியே நடராஜப்பெருமானின் நடனத்தைக் கண்டு பெறும் பேறு பெற்றதைத் தமது திருமந்திர நூலில் கூறியிருப்பதாவது:-

"தப்பிலா மன்றில் தனிக்
கூத்துக்கண்டபின்
ஒப்பில் ஏழுகோடியுகம் இருந்தேனே"

சிவபெருமானின் தனிக் கூத்துகண்ட பின் பதஞ்சலியும், வியாக்கிரமரும் தில்லையில் ஆசிரமம் அமைத்துத் தங்க, திருமூலர் தவம் செய்ய கயிலை சென்றார் என்பதைத் திருமந்திர நூலால் அறியலாம். இவரது காலம் இராமாயண காலமாகிய கி. மு. 6000 என்று ஆராயச்சியாளர் கூறுவர். பின் கி. மு. 3100 ஆம் ஆண்டு அதாவது பாரதச் சண்டை முடிந்து கலியுகம் பிறந்த பின் சுந்தரநாதர் குறுமுனியாகிய அகத்தியரைக் காண விரும்பி பொதிய மலையை நோக்கிப் புறப்பட்டதாக புராண சாரமும் புராணமும் கூறுகின்றன.

இடையன் உடலில் புகுதல்:

சுந்தரநாதர் கயிலாயத்திலிருந்து புறப்பட்டு பசுபதி நேபாளம், அவிமுக்தம் (காசி) கேதாரம் முதலிய சிவத்தலங்களைத் தரிசித்துக்கொண்டு பூரி ஜகந்நாத் என்ற ஊரிலுள்ள சிவனைத் தரிசித்தார். பின்னர் தென்னாட்டிலுள்ள திருவாவடுதுறையையடைந்து சிவபெருமானைத் தரிசித்தபோது சிவபெருமான் சுந்தரநாதரை இங்கேயே தங்கி ஆகம நூலாகிய திருமந்திரத்தை வெளியாக்கச் செய்தார். சுந்தரநாதர் பொதிய மலை செல்லும் எண்ணத்தைக் கை விட்டுக் காவிரி கரையை நோக்கி ஒரு நாள் சென்றார். அக்கரையில் சாத்தனூரைச் சேர்ந்த மூலன் என்ற மாடுகள் மேய்க்கும் இடையன் இறந்து கிடப்பதையும், அவனைச் சுற்றி மாடுகள் யாவும் கண்ணீர் விட்டுப் புலம்பி நிற்பதையும் கண்டார். இநத மூலன் என்ற இடையன் உயிர்ப்பெற்று எழுந்தாலொழியஇம்மாடுகளின்துயரம்நீங்காதென உணர்ந்த சுந்தரநாதர் தன்னுடலை ஒரு மரப்பொந்தில் வைத்து விட்டு மூலனுடைய உடலில் புகுந்து உயிர்ப் பெற்றார். மூலன் உயிர் பெற்றதையறிந்த மாடுகள் யாவும் அவனை நாத்தழும்பு நக்கி, மோந்து, அணைந்து களைப்போடு நயந்து களிப்பினால் வாலெடுத்துத் துள்ளி துயரம் நீங்கின. மூலன் மாலையில் மாடுகளுடன் ஊர் செல்ல அவை தத்தம் இல்லம் சென்றடைந்தன. மூலன் என்ற இடையன் பின் வீடு செல்லாமல் வெளியில் நிற்க மூலனுடைய மனைவி தன் கணவன் வீட்டினுள் வராததால் அவனுக்கு ஏதோ ஈனம் நேர்ந்து விட்டது என அறிந்து அவ்வூரிலுள்ள பலரை அழைத்து தன் குறையைக் கூறினாள். அவ்வூர்ப் பெரியோர்கள் மூலனை அழைக்க, எனக்கு என்மனைவியுடன் எந்தவிதத் தொடர்பும் இல்லை. எனக்கு ஞான உணர்வு வந்து விட்டது. நான் இனி துறவு வாழ்க்கையை மேற்கொள்ளப் போகிறேன். என்று சொல்லி அனுப்பிவிட்டான். அவர்கள் நீங்கியதும் மூலன் மரப்பொந்துக்குச் சென்று தம்முடலைத் தேடச் சிவபெருமானருளால் உடல் காணாமல் மறைந்நு விட்டது. ஆகமப் பொருளைத் தமிழில் வகுக்க வேண்டியே இறைவன் உடலை மறைப்பித்தார் எனத் தமது ஞான உணர்வால் இவர் தேர்ந்து அறிந்து திருவாவடுதுறையை அடைந்தார். அங்கு ஒரு அரசமரத்தடியில் அமர்ந்து ஆண்டுக்கு ஒரு பாடலாக சைவாகமங்களில் உணர்த்தப்பட்ட ஞானம், யோகம், கிரியை, சரியை என்னும் நிலைகளை விளக்கும் மூவாயிரம் பாடல்களைத் தெள்ளு தமிழில் உலகோர் உய்யப்பாடினார். மூவாயிரம் ஆண்டுகள் தவம் செய்து கொண்டு ஆண்டுக்கு ஒரு பாட்டாக மூவாயிரம் பாடல்களைப் பாடித் தமிழ் மூவாயிரம் என்ற பெயரைச் சூட்டி, தம் மாணவர்கள் ஏழு பேர்களுக்கும் அந்நூலைப் போதித்து வந்தார். இக் கருத்தை,

" என்னை நன்றுக இறைவன
படைத்தனன்
தன்னை நன்றுகத் தமிழ்
செய்யுமாறே "

என்ற திருமந்திர அடிகளாலும்,

" தந்திரம் ஒன்பது சார்பு மூவாயிரம்
சுந்தரன் ஆகமச் சொன்மொழிந்
தானே "

என்ற திருமந்திர அடிகளாலும் அறியலாம். பின்னர் தென்மொழி நாட்டில் சீடர்களைக் கொண்டு பல மடங்களைத் தாபித்து சைவ சித்தாந்த நுண் பொருளைச் சிறப்பாக உலகில் பரப்பி வந்தார். கி. மு. 100 ஆம் ஆண்டு திருமூலர் சிவபெருமான் திருவருளால் கயிலாயம் சென்று அங்கே என்றும் பிறவா நெறியாகிய திருவடி முக்தியை அடைந்தார். இனி திருமூல நாயனார் தன்னுடைய ஒப்பற்ற திருமந்திர நூலில் உலக மக்களுக்கு நிலைத்து நில்லாத உயிர், உடல், இளமை, செல்வம் ஆகிய வற்றின் தன்மைகளை அறிவுறுத்திப் பல பாடல்களைப் பாடியுள்ளார். அவற்றுள் சிலவற்றை ஈண்டுக் காண்போம்.

யாக்கை நிலையாமை

அரசன் முதல் ஆண்டி வரைப் பூமியில் பிறந்த அனைவருமே இறத்தல் கண் கூடாகும். அவ்வாறு இறந்த பின் நம் யாக்கை என்று சொல்லப் படும் உடலை அவரவர் வழக்கப்படி புதைத்தோ அல்லது எரியிலிட்டோ அழித்து விடுவர். எனவே நம்முடலானது உயிர்ப் பிரிந்து விட்டால் மீண்டும் அவ்வுடலை வந்து சேராது. 'உணவுஉண்டார். இடப்பக்கம் வலிக்கிறது என்றார். சிறிது நேரத்தில் இறந்து விட்டார்' என நாம் பலர் இறந்து போவதைப் பற்றிப் பேசக் கேட்கிறோம். மை தீட்டிய கண்களையுடைய மனைவியும், மக்களும், செல்வங்களும் இருக்க அக்குடும்பத் தலைவனை உயிர் உடலை விட்டுப் பிரிந்ததே என்று திருமூலர் கூறுகிறார். ஓலமிட்டழுத உறவினர்களும் மனைவியும், மக்களும் கதறியழ அத்தலைவனை எரியூட்டிவிட்டு அனைவரும் நீரில் மூழ்கிப்பின் பிரிந்து சென்று விடுவார்கள். உடலை விட்டு உயிர் பிரிந்த பின் மனைவியும் மக்களும்

உடன் வரமாட்டார்கள். அவன் கற்ற கல்வியும், தான தருமங்களுமே அவனுடன் செல்லுமாம். ஒருவன் இறந்த பின் அனைவருமே அவனைச்சுற்றி அழுதுவிட்டுப்பின் அவனது பேரை நீக்கி விட்டு அவனுக்குப் பிணமென்று பேர் வைத்துப் பின் சுடுகாட்டுக்கு எடுத்துச் சென்று அப்பிணத்தை எரித்து விட்டு அவனைப் பற்றிய நினைப்பையும் அனைவரும் மறந்து விடுவார்களே என்ற சிறப்பான அறிவுரையைக் கூறும் திருமூலர் பாடலாவது:

"ஊரெல்லாம் கூடி ஒலிக்க அழுதிட்டுப்
பேரினை நீக்கிப் பிணமென்று பேரிட்டுக்
சூரையங் காட்டிடைக் கொண்டு போய்ச்சுட்டிட்டு
நீரினில் மூழ்கி நினைப்பொழிந் தார்களே."

இளமை நிலையாமை:

ஒவ்வொரு மனதனின் இளமையானது சூரியன் உதித்து மேற்கில் மறைவதுபோல் மூப்படையும். இளமைக்காலத்திலிருந்து ஈசனைத் துதியுங்கள். எமன் வந்து உங்கள் உயிரைக் கவர்ந்து செல்வதற்கு முன் ஈசனைத் துதித்து பேரின்பத்தை அடையுங்கள். ஒவ்வொருவனுடைய வாழ்க்கையிலும் பாலன், இளையவன், விருத்தன் என்று காலங்கள் கழிவதைக் கண்டும் மானிடர்கள் ஈசனைத் துதித்துப் பயனடைய அறியவில்லை. இவ்வுலகைக்கடந்து நம்முடைய பாவங்களைப் போக்கி முக்தியைத் தரும் சிவபெருமானை வணங்க விரும்புபவன் நான் என்று திருமூலர் கூறும் மிகச் சிறப்பான பாடலாவது;-

"பாலன் இளையன் விருத்தன் எனநின்ற
காலங்கழிவன கண்டும் அறிகிலார்
ஞானங்கடந்தண்டம் ஊடறுத்தானடி
மேலுங்கிடந்து விரும்புவன்யானே"

உயிர் நிலையாமை:

தழைத்து வளருகின்ற மரத்திலுள்ள பழம், காய், இலை முதலியன யாவும் பழுத்து உதிர்வதைக் கண்டும் மனிதர்கள் இறைவனை வணங்கித் துதித்துப் பயன் பெறாமல் தம்வாழ் நாட்களை வீணாகக் கழிக்கிறார்களே என்று திருமூலர் வருந்துகிறார். மனிதர் தம்விதியை நினைத்துப் பார்த்து ஏழைஎளியவர்களுக்குத் தருமம் செய்யுங்கள். உயிர் நிலையாததை நினைத்து நாதனாகிய சிவபெருமானை நினைத்து வணங்குங்கள். பிறரைப் பழித்துப்பேசி தருமம் செய்வதை விட்டுவிடாதீர்கள். பிறர் பொருளுக்கு ஆசைப்பட்டு அப்பொருள்களைக் கவராதீர்கள். உங்களால் முடிந்தபோது, முடிந்தவரை உணவும், பொருளும் கொடுத்துத் தருமம்செய்யுங்கள்' எனத் திருமூலர் உயிர் நிலையாமையைக் குறித்துப் பாடிய சிறப்பான பாடலாவது:-

"அவ்வியம் பேசி அறங்கெடநினைமின்
வெவ்வியனுகிப் பிறர்பொருள் வவ்வன்மின்
செவ்வியனாகிச் சிறந்துண்ணும் போதொரு
தவ்விகொடுண்மின தலைப் பட்டபோதே"

செல்வம் நிலையாமை :

மனிதர்களே உங்களுடைய செல்வங்கள் யாவும் அழிவதற்கு முன் சிவபெருமானைத் தொழுது பிறப்பறுத்து முக்தி பெறுங்கள். உங்களுடைய செல்வங்களெல்லாம் நீரில் அடித்துச் செல்கின்ற பொருள்களைப் போல போய் விடும் தன்மையன. எனவே இவ்வுலகில் நிலையில்லாத உயிர் உடலில் இருக்கும் போதே தருமம் செய்யுங்கள் என்று அறிவுரை கூறுகிறார் திருமூலர். மேலும் நல்வாழ்க்கையும் மனைவியும், மக்களும், உறவினர்களும், செல்வமும் பெற்று இன்ப வாழ்வு வாழ்பவர்கள் அச்செல்வத்தைத் தருமம் செய்து புகழ்பெறவேண்டும். அத்தகைய செல்வம் பெற்றுத் தருமம் செய்து, அச்செல்வத்தை விரிவு செய்து வாழ்பவர்களுக்குக் கடவுள் துணையும் உண்டாகுமெனத்திருமூலர் அறிவுறுத்துகிறார். இச்சிறப்பானக் கருத்தைக் கூறும் பாடலாவது:

"வாழ்வும், மனைவியும், மக்கள் உடன்பிறந்
தாருமளவே தெமக்கென்பர் ஒண்பொருள்
மேவுமதனை விரிவுசெய்வார்கட்குக்
கூவுந்துணை யொன்று கூடலுமாமே'

திருமூல நாயனார் அறுவுறுத்திய அறிவுரைகளின்படி ஒவ்வொரு மனிதனும் செல்வம், யாக்கை, இளமை, உயிர் ஆகியவை நிலையில்லாதவை, அழியக் கூடியவை என அறிந்து, உடலில் உயிர் உள்ளபோதே தருமங்கள் செய்து, இறைவனை நாள் தோறும் வணங்கிப் பிறப்பறுத்து இறைவனது பாதாரவிந்தங்களில் சென்றடைந்து முக்தி பெற்றுப் பேரின்ப வாழ்வு பெறுவோமாக!



(20-ஆம் பக்கத் தொடர்ச்சி)

களில் மந்திர விதானப்படி தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம் ஆகிய சதுர்விதப் பலன்களை அளிக்கவல்ல சக்கரத்தோடு தோன்றுகிறார். திருமண மாகாத பெண்கள் 11 சனிக்கிழமைகள் 11 முறை வலம் வந்து வழிபட்டால் அவர்களது திருமணத்தை நடத்தி வைக்கக் கூடிய கல்யாண சுதர்சனராக இவரை ஆராதிக்கின்றனர். புத்திரபாக்கியம் நாடுவோர், பதவு உயர்வு வேண்டுவோர் மற்றும் பல பலன்களை நாடி வழிபடுப் பக்தர்களின் ஆசைகளை இவர் நிறைவேற்றுவதால் இச்சந்நிதியில் சனிக்கிழமை மற்றும் விசேஷ நாட்களில் மக்கள் வெள்ளம் கரை புரண்டோடுகிறது.

திருவரங்கம், அழகர் கோயில், தாடிக்கொம்பு, ஸ்ரீரங்கப்பட்டினம், ஸ்ரீவில்லிபுத்தூர், திருநாங்கூர், நாங்குநேரி போன்ற பல வைணவத் தலங்களிலும் சக்கரத்தாழ்வாரை வழிபடலாம். திண்டுக்கல்லுக்கு அருகிலுள்ள தாடிக்கொம்பு என்ற ஊரில் இடம் பெற்றுள்ள சௌந்தரராஜப் பெருமாள் கோயிலில் சுந்தர பாண்டியர் மண்டபத்தில் சக்கரத்தாழ்வாரின் பிரம்மாண்டமான திருவுருவத்தைக் காணலாம். இக்கோயிலில் மற்றொரு சந்நிதியில் யந்திரவடிவில் உள்ள சக்கரத்தாழ்வாரையும் தரிசிக்கலாம். சுதர்சனரை வெகு காலமாக மன்னர்களும், மகான்களும் ஆராதனை செய்துள்ளனர். போர் முனையில் வெற்றி பற விரும்பிய அரசர்கள் பலர் சுதர்சன வழிபாட்டில் ஈடுபட்டிருந்தனர். திருவரங்கத்தைச் சேர்ந்த ஸ்ரீகூர நாராயண ஜீயர் நூறு பாசுரங்களைக் கொண்ட 'சுதர்சன சதகம்' என்ற நூலை அருளியுள்ளார். திருவரங்க ஆலயத்தில் திருவாய்மொழிப்பாடல்களைப் பாடிவநத பக்தர் ஒருவர் கண்டமாலை என்ற கொடிய நோயால் பாதிக்கப்பட்டார். அவருக்கு அந்நோயினின்று விடுதலை அளிப்பதற்காக இச் சதகத்தை ஜீயர் இயற்றியதாகக் கூறுவர். அக்கோயிலில் நடைபெற்ற தெப்போற்சவத்தின் போது வெள்ளப் பெருக்கு ஏற்பட்டுத் தெப்பம் அடித்துச் செல்லப்பட்ட போது 'சுதர்சன சதகத்தை' ஜீயர் இயற்றியதாகவும், அப்போது அத்தெப்பம் நீரின் பிரவாகத்தை எதிர்த்து வந்ததாகவும் மற்றொரு கருத்து உள்ளது. இந்நூலிலுள்ள ஒவ்வொரு பாடலும் ஒவ்வொரு பலனை அளிக்கவல்லது. அவரவரின் விருப்பதிற்கேற்ப குறிப்பிட்ட ஸ்லோகங்களை பாராயணம் செய்து பயனடைந்தவர்களும் உண்டு.

ஸ்ரீநிகமாந்த மகாதேசிகர் என்று போற்றப்படும் வேதாந்த தேசிகர் ஹயக்ரீவரின் ஆழ்ந்த பக்தராக மட்டுமின்றி, ஒப்பற்ற சுதர்சன உபாஸகராகவும் விளங்கினார். அப்பெருமான் இயற்றிய 'ஸ்ரீ சுதர்சன் அஷ்டகம்' என்ற நூல் சுதர்சன வழிபாட்டில் ஈடுபட்டுள்ளவர்களுக்கு ஒரு வரப்பிரசாதமாகும். இவை தவிர 'சுதர்சன கவசம்' அம்சபரீஷன் இயற்றிய 'ஸ்ரீமகா சுதர்சன துதி', 'ஸ்ரீ சுதர்சன மகா மந்திரம்', 'அஷ்டோத்திர சதநாமாவளி, ஸ்ரீசக்ரராஜ மங்களம், குடந்தை ஸ்ரீ சக்ரபாணி ஸ்தோத்திரம் போன்ற வடமொழிப் பாசுரத் தொகுப்புகளும் சுதர்சனரின் பெருமையைப் போற்றுகின்றன.



# விண்ணப்பம்

'ஸப்தகிரி' மாத இதழுக்கான தொகையை 'மணியார்டர்' மூலமாக அனுப்புதல் பயனுள்ளதாக அமையும். மணியார்டர் கூப்பனில் தங்கள் முகவரியினை ஆங்கிலத்தில்எழுதுவதும், பழைய சந்தாதாரராக இருந்தால் தங்கள் சரியான சந்தா எண்ணை மறக்காமல் குறிப்பதுவும் 'ஸப்தகிரி' நிருவாகப்பணியினை எளிதாக அமைக்கும். தொகை அனுப்பியும் இதழ் பெறாதவர்கள், தாங்கள் எழுதும் புகார்க் கடிதத்தில் மணியார்டர் எண்,செய்த தொகை, அனுப்பிய தேதி ஆகிய விவரங்களுடன் தங்கள் முழு முகவரியுடன் ஆங்கிலத்தில் தொடர்பு கொண்டால் விரைவில் செயலாற்ற உதவும். சந்தாதாரர்களின் முழு ஒத்துழைப்பையும் எதிர்பார்க்கிறோம்.

— ஆசிரியர்.

# துலுக்க நாச்சியார்

திருமதி. இரா. வசுமதி,
சென்னை-113

''மாட மாளிகை சூழ்திரு வீதியும
மன்னு சேர்திரு விக்கிரமன
வீதியும்
ஆடல மாறன அகளங்கன வீதியும்
ஆலி நாடன் அமர்ந்துறை வீதியும்
கூடல வாழகுல சேகரன் வீதியும்
குலவி ராக(ச) மகேந்திரன்
வீதியும்
தேடரிய தாம வாமாவின வீதியும
தெனன ரங்கன திருவா ரணமே''

என்ற தனிப்பாடல், திருவரங்கக் கோயிலினுடைய ஏழு திருச்சுறறுக களின் அமைப்பினை விளக்குகிறது. இதில், இரண்டாவது திருச்சுற்றான இராசமகேந்திரன் வீதியில், துலுக்க நாச்சியாரின் சந்நிதி அமைந்துள்ளது.

சங்க இலக்கியங்களில் தலைவன், தலைவி என்ற பகுப்பையொத்து, இறை இலக்கியங்களில், அதாவது சமய இலக்கியங்களில் இறைவன், இறைவி என்ற இரு நிலைகள் காணப் படுகின்றன. இந்நிலை இலக்கியங் களில் மடடுமன்றி, ஆலய வழிபாடு களிலும் இடம் பெற்றிருத்தல் என பது நாம் நடைமுறையில் காணு கின்ற ஒன்றேயாகும. 'துலுக்க நாச்சியார்' எனபவர் திருவரங்கத்தில் பள்ளிகொண்டுள்ள அரங்க நாதனின் இறைவியாகச் சிறப்பிடம் பெற்றுத் திகழ்பவர். இநநாசசியாரின் தொடர்பினை, அக்கோயிலில கிடைத்த செய்திகளின் வழியும், நூல்களின் மூலமும், வரலாற்றின் துணை கொண்டும ஆய்ந்து விளக்க முற்படுவதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**பெயர்—விளக்கம் :**

அரங்கநாதனின் மீது கொண்ட அளவுகடந்த பக்தியினால், இறைவனைக் கோயிலில் காணாது, தன் உயிரைப் போக்கிக் கொண்டதாகக் கூறபபடும் ஒரு முகமமதியப் பெண மணியே 'துலுக்க நாச்சியார்' இவர் தென்னிந்தியாவில் முகமதியர் ஆட்சிக் காலத்தில, டில்லியில் ஆட்சி நடத்தி வந்த டில்லி சுலதானின் மகளாவர். இவருககுச் சுலதானி, ஸுரதாணி, சாநது நாச்சியார், பீபி நாச்சியார் என்ற வேறு பெயர்களும் இருந்திருக்கின்றன.

துலுக்க நாச்சியார் என்ற பெயரில் உள்ள முதற் சொல்லான 'துலுகக' என்பது, துலுக்கர் (துருககர்) இனத்தைக் குறிக்கிறது. 'நாச்சியார்' என்ற சொல் 'இறைவி' எனற பெண் தெய்த்தைவக் குறிக்கிறது பொதுவாகக் கோயில்களில் இறைவியைத தாயார், நாச்சியார், தேவியார், உபய நாச்சியார், அம்மன் என்று குறிப்பிடுவர் இத்திருவரங்கக்கோயில் வைணவச் சமயக் கோயிலானதால் 'நாச்சியார்' என்ற சொல்லை இணைத்து 'துலுக்க நாச்சியார்' என்று அழைக்கின்றனர். இங்கு, இந்நாச்சியாரின் உருவம் சித்திர வடிவமாகச் சித்தரிக்கப்பட்டுள்ளது.

**புராணச் செய்தி :**

தலம், தீர்த்தம், மூர்த்தி இம்முனறினைப்பற்றியக் கதைகளே தல புராணமாக அமைகின்றன. துலுக்க நாச்சியாரைப்பற்றியமையும் புராணப் பழங்கதை, வரலாற்றுடன் தொடர்புடையதாகையால, அதனை வரலாற்றுப் பழங்கதை (Historical Legend) என்று கூற இயலும்.

கி.பி. 13-ஆம் நூற்றாணடில் தெனனிந்தியாவில் முகமதியர் படையெடுத்தபொழுது அரங்கநாதனின திருமேனி இரு முறை கொள்ளையடிக்கப்பட்டதாக வரலாற்றுக குறிப்புகள் தெரிவிக்கின்றன. முதற் படையெடுப்பில் டில்லி சுல்தான், அரங்கநாத உற்சவ மூர்த்தியைக் கவர்ந்து சென்றான. இச்சுல்தான் கவர்ந்து சென்ற பல பொருள்களில் இச்சிலை மட்டும் சுல்தானின் மகளுக்கு விளையாடுதற்குரிய பொருளாய் அமையலாயிற்று. இதற்கிடையில், அரங்கநாதனைக் காணாமல் உணவு உணணாமலிருக்கும் ஒரு பெண்மணி (பினசென்றவலலி) மாறு வேடம் புனைந்து டில்லி சுல்தானைப் பினதொடர்ந்தாள். அரங்கநாதன் இருக்கும் இடத்தைக கண்டறிந்து திருவரங்கத்திறகு வந்து செய்தியைத் தெரிவித்தாள. உடன் பரிவாரங்களுடன் டிலலிக்குப் புறப்பட்டனர் சிலர். இவர்கள் டில்லி, சுல்தானுடன் சமரசம் பேசி 'ஜக்கினி' என்ற நாட்டியமாடி மகிழ்வித்தனர். அவர் பொன்னும் பொருளும் அளிக்க, அதனைப் பெற்றுக்கொள்ள மறுத்தனர். உடனே எங்கள் அழகிய மணவாளனைத் தர வேண்டும் எனறு கேட்க, அவர் 'நீங்கள் உங்கள் தெய்வத்தைத் தாராளமாக அழைத்துக் கொள்ளுங்கள்' எனறு கூற, பாடல்கள் பல இசைத்து உற்சவ மூர்த்தியை எடுத்துக்கொண்டு திருவரங்கம் விரைந்தனர்.

மறு நாள விடியலில் டில்லி சுல்தானின மகள் அரங்கனின் சிலையைக் காணாது வாடி, தந்தையிடம் அச சிலையைக் கேட்க, அதற்கு அவன் மகளுடன் சேனைகளுடனும் திருவரங்கத்திற்கு வருகின்றான். இவாகள் கோயிலுக்குள் அனுமதிக்கபபட விலலை. பின 'ஆரியபபடாள் வாயில்' என்ற வாயில்வரை அனுமதிக்கப்பட்ட இவாகள் கோயிலுக்குளளே மூர்த்தி இல்லாமல் இருப்பதைக்கண்டசுல்தானின் மகள் இறந்து

விடுகின்றாள். இதைக் கண்ட சுல்தான மனம் உடைந்து, இக்கோயிலுக்காகப் பொன்னையும், பொருளையும் அளித்தார் என்பதாகக் கதை நிலவி வருகிறது.

இந்தக் கதை நடந்ததாகத் தெரிந்து கொளவதற்குப் பல நூற்றாண்டுகள் கழித்து 'இராசமகேந்திர சோழன்' செய்த செயலே நமக்கு ஆதாரமாக இருக்கின்றது. இப் புராணக் கதைகளைத் தல வரலாறு நூல்களும், கோயிலொழுகு, குரு பரம்பரை பிரபாவம், யதீந்திர பிரவணப் பிரபாவம், ஆசார்ய-சூக்தி முக்தாவளி ஆகிய வடமொழி நூல களும எடுத்துரைக்கின்றன.

மேலும், முகமதியர் கொணடு சென்ற உற்சவ மூர்த்தியைத் திரும்பப்பெற, 'இராமானுஜர்' தலைமையில் டில்லிககுச் சென்றார் என்பதும், அவர் தன இசையினால் 'செல்லப பிள்ளாய்!வாராய்' என்று பாடி அரங்கனைத் திரும்பப் பெற்றதாகவும், அதைக் கண்ட சுல்தானின் மகள் இராமானுஜரைத் தொடர்ந்து திருவரங்கம் வந்தாளெனவும், ஆண்டாளைப் போல இறைவனுடன் ஒன்றி விட்டாளெனவும் மற்றுமொரு கருத்து நிலவுகிறது!

வரலாற்றுப் பின்னணி :

தென்னிந்திய வரலாற்றினை நோக்கின் முகம்மதியர்கள் கி. பி. 12-ஆம் நூற்றாண்டின பிற் பகுதி முதல கி. பி. 16-ஆம நூற்றாண்டு வரையிலும் ஆட்சி புரிநதனர் என்று கூறலாம். அலாவுதீன் கில்ஜியின படைததலைவனான மாலிக்காபூர், தென்னாட்டின்மீது படையெடுததுத தமிழகக் கலைச் செல்வங்களைக கவர்ந்து சென்றவன். கி. பி. 1307 லிருந்து கி. பி. 1311 வரையிலும தென்னாட்டின் மீது அவன் போர் தொடுத்தான். அப்பொழுதுதமிழகத்தின்ஒருபகுதியில்ஆட்சிநடத்திய காகதீய நாட்டு மன்னனான இரண்டாம் பிரதாபருத்திரனுடன் போர் புரிந்து தொண்டை மண்டலத்தையும், சோழ மண்டலத்தையும் கைப்பற்றினான்.

முகமதியர்கள் கண்ணனூரின் மீது படையெடுத்தபோது, அருகில் இருநத திருவரங்கத்தின் மீதும் படையெடுத்தனர். அப்பொழுது கோயிலின் வடக்குவாயிலான மூன்றாவது ஆரியப் பட்டாள் கதவு வழியாக உள்ளே புகுந்தனர். கோயிலைப பாழபடுத்தியதுடன் அரஙகநாதரின் உருவச் சிலையையும் கவர்ந்து சென்றனர். இவ்வரங்கநாத உறசவமூர்த்தியின் சிலை டில்லி சுல்தானின் அரண் மனைக்குககொணடு செனறதைப்பின் வரும் சான்று உறுதிப்படுத்துகிறது.

"டில்லீசுவரனான துலுக்கன் ப்ரதாருத்ரனை ஜயித்து தொண்டை மணடலம், சோழ மண்டலம் முதலான ப்ரதேசஙகளிலே பரவி முற்றிலும வ்யாபித்து, திவ்ய தேசங்களில் பெருமாளகளையும் எடுத்துக் கொண்டு போமளவில்; திருவரங்கந் திருப்பதியிலேயும் வந்து புகுந்து, ஆரியப்பட்டாள் காவலான வடக்கு வாசலிலே...... அழகிய மணவாளப் பெருமாள், சேரதலவல்லியார முதலான விக்ரஹஙகளையும் எடுத்துக் கொண்டு" *(2)*

கி. பி. 1296-இல் 'கர்ஷுஸ்ப் மாலிக்' என்கிற அலாவுதீன் சுல்தான் தென்னிந்தியாவில் தேவகிரி என்ற இடத்தைத் தாக்கினான். இவனின் படைத் தலைவனே மாலிக்காபூர். இவன அரசனுககுத் துணைசெய்யும் வகையில் தென்னாட்டில் பல இடங்களைத் தாககினான.

தெனனிநதியச் செல்வங்கள் முகமதியரின வருகையால் அழிநது போயின எனபதற்கு வரலாற்றுச சான்றுகள் இருப்பினும், அரங்கனின் மீதுள்ள பக்தியினால் உருவான 'துலுக்க நாசசியாருக்கு'ப் புராணக கதைகள்தான் சான்றாகின்றனவே தவிர,தொல்பொருள்சான்றுகள் எதுவும்கிடைக்கவில்லை. ஆயினும், இன்றும் திருவரங்கத்தில், இரண்டாவது திருச்சுற்றிலுள்ள அர்ஜுனமண்டபத்தில் அமைந்துள்ள துலுக்கநாச்சியார் சந்நிதியே, ஓரளவிற்குச் சான்றுகளைத் திரட்ட வழிகோலுகிறது.

கலவெட்டுச் சான்று :

துலுக்க நாச்சியார் தொடர்பான செய்திகளைக் கல்லில் வடித்திருக்கின்றனர். ஆனால் தற்பொழுது கிடைக்கவில்லை என்பது மிகவும் வருநதுதற்குரியது. அதாவது,

"இந்த வ்ருதாந்தங்களெல்லாம் சாந்து நாச்சியார் ஸந்நிதியில் வெளிப் புறத்துச் சுவரிலே ஶிலா லிகிதம் பண்ணியிருந்தது. சித்ர மண்டபம் ஜீர்ணோத்தாரணத்திலே விஸகலிதமாய்த்து" *(3)*

என்ற செய்தியை நோக்கின், சான்று கிடைக்காமற் போனதற்குரிய காரணம புலனாகும்.

கல்லிலும், சுவரிலும் எழுதி வைக்கப்படுகின்ற சான்றுகள் அந்தந்தக் காலவரலாற்று நிகழ்ச்சிகளை எடுத்துரைப்பவை. இச்சான்றுகள் யாவும் நாட்டு வரலாற்றை, சமுதாய வரலாற்றை, அரசியல் வரலாற்றைப் பிற்காலத்தவர் அறிந்துகொள்வதற்குத் துணை செய்கின்றன. அவ்விதம் உறுதுணை புரியும் இத்தொல் பொருள் சான்றுகளை, ஒருவருக்கொருவர் பொய்யாகப் புனைந்துரைப்பது, முற்றிலுமாக அழித்து விடுவது, நடந்த நிகழ்ச்சிகளை மாற்றி எழுதுவதுபோன்ற செயல்கள் புறக்கணிககப்பட வேணடும். உள்ளதை உள்ளவாறு எழுதும்பொழுதுதான் ஒன்றின் வரலாற்றைத் தெளிவாக விளங்கிக் கொள்ள முடியும்.

பொதுவாகக் கோயில்களின் மதிற் சுவர், தரை, படிக்கட்டு போன்ற இடங்களில் செய்திகளை எழுதி வைப்பர். ஏனெனில் பலரும் கூடுவதாலும், புனிதமான இடமாகக் கருதியதாலும அவ்வாறு செய்தனர். கோயிலில் உள்ள இடிபாடுகளைப் புதுப்பிக்கும்பொழுது அதிலுள்ள

செய்திகளை உள்ளது உள்ளபடி படியெடுத்து வைத்தல் இன்றியமையாத ஒன்றாகும். "சில கோயில்களில் முதல் கல்வெட்டுகள பாழ்பட்டோ, உடைந்தோ போயிருக்கக் கூடும். அந்த நிலையில் ஊர் மக்கள் அப்பழங்காலக் கல்வெட்டுகளில் உள்ள செய்திகளை முறையாகப்படி எடுத்து வைத்துக் கொள்வார்கள்" (4) எனபதும், "இவ்வாறு பல கோயில்களில் இரண்டாவதாகப் படி எடுத்த புதிய கல்வெட்டுகள உள்ளன" (5) என்பதையும் ஈண்டு ஒப்பு நோக்கின், சித்திர மண்டபத்தினைப் புதுப்பிககும்பொழுது, முன்பு சுவற்றில் இருநதச் செய்தியைப் படி எடுக்காமல் விடுததிலிருந்து, அதன பயனை அக்கால மக்கள் உணரவில்லையென்றே கூற வேண்டும். படியெடுத்திருப்பின் இன்று எத்தகைய பயனுடையது என்பது கூறாமலே விளங்கும். இத்துலுகக நாச்சியார், தெலுங்குமொழி நாட்டுப்புறப் பாடல்களிலும் இடம் பெற்றுள்ளார் என்பது குறிப்பிடத் தக்கது. அந்த நாட்டுப்புறப்பாடல்களின் தொகுப்பை 'ஸுரதானிகல்யாணமு' 'ஸுரதானி பரிணயமு' என்மைப்பதன் வழி, இந்நாச்சியாருக்கும் திருவரங்கத்திற்குமிடையே தொடர்பு இருந்திருத்தலை மட்டும் நன்கறிய முடிகிறது.

### தோற்றம் :

சோழ அரசர்களில் இறுதியாக ஆட்சிபுரிந்த இராசேந்திர சோழன் காலத்தில்தான திருவரங்கக் கோயிலில் துலுக்க நாச்சியார் சந்நிதி ஏற்படுத்தப்பட்டது. அதாவது டில்லி சுலதானிடமிருந்து மீட்கப்பட்ட அரங்கநாதன் சிலை 59½ ஆண்டுகள் காட்டில் இருந்து, பின சலவைத் தொழிலாளி ஒருவரின் உதவியால், ஈரவாடைத் தீர்த்தத்தின் மூலம் அவ்வுற்சவமூர்த்தியை மீண்டும் கோயிலுக்குள் 'பிரதிஷ்டை' செய்யப் பட்டது. இந்த 59½ ஆண்டுகளுக்கு முன்பும், இடையிலும் நடந்த செய்திகளை மக்கள், சோழ அரசனிடம் தெரிவிக்கவே, அச்சோழன் முகமதியப் பெண்ணிறகுக் கோயிலெழுப்பினான். இதனால் துலுகக நாச்சியார் சந்நிதியுடன, நாச்சியாருக்காக கொறநாட்டில் இரணடு கிராமங்களையும் தந்தான் சோழ அரசன்.

எனவே, கி. பி. 1311-ஆம் நூற்றாண்டில் மாலிக்காபூர் படையெடுப்பால் கவரப்பட்ட அரங்கன் மீண்டும் 59½ வருடங்கள் கழித்துக் கோயிலில் இடம்பெற்றச் செய்தியைககொணடு கணக்கிடும்பொழுது கி.பி. 1371-ஆம் ஆண்டு துவக்கத்தில் துலுக்க நாச்சியார் சந்நிதி தோற்றம் பெற்றிருககக் கூடும் என்று எண்ணுவதற்கு இடமளிக்கிறது.

### அமைப்பு நிலை :

இறைவனுடன் ஒன்றியதாககூறப்படும் இத்துலுக்க நாச்சியார் சந்நிதி இரண்டாவது திருவீதியான 'இராச மஹேந்திரன்' திருவீதியில் உள்ள அர்ஜுன மண்டபத்தின் வட கீழ் மூலையில் சித்திர வடிவில் இடம் பெற்றுள்ளது. பக்கவாட்டுச் சுவரில் ஆண்டாள், பெரியாழ்வார் தசாவதாரம் முதலிய வண்ண ஓவியங்கள் வரையப்பட்டுள்ளன. இநநாச்சியாரின் சந்நிதி முகமதியப் பாணிக்கேற்பவே அமைந்துள்ளது.

### வழிபாட்டு முறை :

இந்நாச்சியாரின் வரவினால் இந்து மத வழிபாட்டுமுறையில் வட நாட்டு உணவுப் பொருள் இடம்பெறுகிறது. அதாவது கோதுமை மாவினால் செய்த சப்பாத்தி அரங்கனுக்குத் திருவமுது செய்யப்படுகிறது. அதுமட்டுமின்றி இறைவனுககுத் திருவமுது செய்யப்படும் உணவுப் பொருள்கள் யாவும் துணியில் வைத்துக் கட்டப்படுகின்றன. இறைவனுக்குப்படைக்கப்படும் வெற்றிலையில் சுண்ணாம்பினை, இலையின் முன்புறம தடவித் திருவமுது செய்வர். இச்செயல்கள் யாவும் முகமதிய முறைக்கேற்பப் பின் பற்றப்படுகின்றன.

### திருவிழா

திருவரங்கத்தில் ஆணடு முழுவதும் நடக்கும் விழாக்களில் மார்கழி மாதத்தில நடைபெறும பகல்பத்து, இராப் பதது விழாவினபோது அரங்கநாதன் துலுக்க நாச்சியாருக்குக் காட்சி தருகின்றார். அதுமட்டுமின்றி, இவ் விறைவிக்காக, இறைவன் முகமதிய உடையான கைலியைக் (லுங்கி) கட்டிக்கொண்டு காட்சியளித்தல் இன்றும் நடைமுறை வழக்காற்றில் இருந்து வருகின்றது.

### முகமதிய ஆண்டாள :

அரங்கனமேல் கொண்ட காதலில் பக்தியில் மூழ்கிய ஆண்டாளைப் போலவே துலுக்க நாச்சியாரும் இறைவனுடைய நெஞ்சில் இடம் பெற்றவராக விளங்குகிறார். நாள் தோறும் இறைவனுக்கு மாலை தொடுத்து, அந்த அழகில் மயங்கிய சூடிக்கொடுத்த நாச்சியாரை ஒத்து இவ்விறைவியும்உற்சவமூர்த்திச்சிலையுடன விளையாடுகின்றபொழுது அழகில் மயங்கினார். இருவரும் இனத்தால் வேறுபட்டிருப்பினும் பக்தியினால் ஒன்றுபடுகின்றனர். இந்து சமயப் பெண்மணியைத் தெய்வமாகக் கருதி வழிபடுதலிலும் ஒரு முகமதியப் பெண்மணி, இந்து சமயக் கடவுளின் மீது ஆராக்காதல் கொண்டு அக்கடவுளுடன் ஐக்கியமாகிவிட்டாள் என்று கூறும்பொழுது இந்நாச்சியார் ஆண்டாளைக்காட்டிலும் அரங்கன் மீது கொண்ட காதல் தீவிரம் புரிகினறது. திருவரங்கன், ஆணடாளைத் தன இறைவியாகக் கொள்ளுதல் போலவே இத்துலுக்க நாசசியாரையும்இறைவியாக ஏற்றுக் கொள்ளுகின்றார் என்பதும் குறிப்பிடத்தககது.

முகமதியப் பெண்ணை இந்துமதக் கடவுளாகக் கொண்டு வழிபாடு செய்கின்ற பெருமையைத் திருவரங்கக் கோயில் பெற்றிருப்பதை எண்ணும் போது, இந்து-முஸ்லீம் சமய ஒற்றுமைக்குச் சோழன் அடிகோலியிருக்கிறான் என்பது நன்குபுலப்படுகிறது.

அத்துடன் இறைவனிடம் உண்மை அன்பு செலுத்தும் எந்த மதத்தின ரிடையேயும் வேற்றுமைக்கு வழி யில்லை என்பதையும் இந்நாச்சியார் சந்நதி தெளிவுபடுத்துகின்றது.

டிவுரை :

1. அரங்கநாதனின் இறைவியாய் திருவரங்கத்தில துலுக்க நாச சியாரும் இடம் பெற்றமை.
2. இந்நாச்சியாரைப்பற்றிய புரா ணச் செய்திகளுக்குச் சானறு இல்லாமை.
3. சித்திர மணடபததைப புதுப் பிக்கும்பொழுது மீணடும் மூலச் செய்தியைப் படியெடுக காமல் போனதன் காரணத தையறிய இயலாமை.
4. முகமதியப் பெண்ணை இந்து மதக்கோயிலில் கடவுளாக்கிய மை
5. ஆணடாளுடன ஒப்பிடக கூடிய நிலையில் சிறப்பிடம் பெற்றமை
6. இந்து மதத்தில் இல்லாத வழி பாட்டு முறைகளை இவவிறை விக்காக ஏற்றுககொண்டமை.
7. இராமாநுஜர் அரங்கனின் சிலையை மீட்கச் சென்றதாக வும் வேறு சிலர் சென்றதாக வும் இருவேறு கருத்துகள் நிலவுகின்றமை.
8. முழுமையான சானறுகள கிடைக்கப் பெறாமைககான காரணம்.

ஆகிய செய்திகளில் சில வினாக் களுக்கு வரலாற்றுச் சான்றுகள் கிடைக்கப்பெறின மேலும் ஆராய்வ தற்கு அவை வழிவகுககும.

அடிக்குறிப்புக்கள் :

1 P 5, Lord Ranganatha, S Sathyamurthi Ayyangar, Arulmigu Ranganathaswami Devasthanam Srirangam, 1981
2. ப. 19, கோயிலொழுகு, கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார் (பதி), ஸ்ரீநிவாஸம் பிரஸ், திருச்சி, 1976.
3. ப. 10, மேற்படி
4. ப. 39, கல் சொல்லும் கதை கள், வெள்ளையாம்பட்டு சுந் தரம், அசோகன பதிப்பகம், சென்னை, 1972.
5. ப. 40. மேற்படி.



(16-ஆம பக்கத் தொடர்ச்சி)

நஹிம ராக ந லோப ந மாந மதா |
தின்ஹ கே ஸம வைபவ வா பி பதா ||
ஏஹி தே தவ ஸேலக் ஹோத் முதா |
முனி த்யாகத் ஜோக பரோஸ ஸதா ||

(அப்பேர்பட்டவனுக்கு ராகம் (தீராத ஆசை) இல்லை, லோபம் (கஞ்சத்தனம்) இல்லை, மானம (அவ மானம் இவற்றைப்பற்றிய சிந்தனை) இல்லை, கர்வம் இல்லை: அவனுக்கு சுகமும், துக்கமும் ஸமமே. இவ்வா றாக முனிவர்கள் யோக (சாதன)த் திற்காக எல்லாவறறையும் துறக் கிறாாகள். மேலும் மகிழ்சசியுடன கூட பகவானுடைய சேவகர்களாக வனத்திற்குச் செல்கிறார்கள்.)

முனி மானஸ பங்கஜ ப்ருங்க பஜே |
ரகுவீர் மஹா ரணதீர் அஜே ||
தவ நாம் ஜபாமி நமாமி ஹரி |
பவரோக மஹாகத மாந் அரீ ||

(ஓ! முனிவர்களின் இதயத் தாம ரைக்கு வண்டு போன்றவரே! ஓ! பெரிய வீரனே! ரகுதீரனே! நான் தங்களை பஜிககிறேன (தங்கள் திரு வடிகளை தொட்டு சேவிக்கிறேன்) ஓ ஹரியே! தங்களுடைய நாமத்தை ஜபிக்கிறேன் மேலும் தங்களுக்கு நமஸ்கரிக்கிறேன் (வணங்குகிறேன்). தாங்கள் ஜனன மரணமாகிய (பவ ரோக) நோய்க்கு பெரிய மருந்தாவீர்! மேலும் அபிமானத்திற்கு எதிரியா வீர்)

குண சீல் கருபா பரமாயதனம் |
ப்ரணமாமி நிரந்தர் ஸ்ரீரமணம் ||
ரகுநந்த நிகந்தய த்வநத்வ கனம |
மஹி பால பிலோகய தீன ஜனம் ||

(தாங்கள் குணத்திற்கும், சீலத் திற்கும், மேலும் கிருபைக்கும் ஒரே பெரிய இருப்பிடம்! தாங்கள் திரு வின கணவர் (லக்ஷ்மீபதி) நான் தங களை எப்பொழுதும் சேவிக்கிறேன். ஓ ரகுநநதனா! (தாங்கள ஜனன — மரண, சுக-துகக, ராக-தோஷமாகிற இரட்டைகளை நாசம் செய்யுங்கள். ஓ உலகத்தை ஆளும் ராஜனே! இந்த தின ஜீவனாகிய என் மேல் தங்க ளுடைய கடாக்ஷ வீக்ஷணத்தை (அருள் கூர்ந்த பார்வை) செய்தருள் வீர்!)

பார பார் பர் மாங்கொ ஹர்ஷி தேஹு ஸ்ரீரங்க |
பத ஸரோஜ் அநபாயினி பகதி ஸதா ஸத் ஸங்க ||

(ஓ திருவரங்கா! நான் தங்களிடத் தில திரும்பத்திரும்பக்கேட்டுக்கொள் ளும் வரம் யாதெனில், எனக்கு தங்க ளுடைய திருவடித் தாமரைகளில் என்றும் அசையாத (மாறாத) பக்தி யையும் மேலும் தங்களுடைய பக்தர் களின் ஸத் ஸங்கமும் (சாதுகோஷ்டி) (திருவரங்கன் திருமுற்றத்தடியவர் களின் இன்பமிகு பெருங்குழுவு) எனக்கு எப்பொழுதும் கிடைக்கட் டும்! தாங்கள் மகிழ்ச்சியுடன இவ் விரு வரத்தையும் கொடுத்து அருளுங் கள்!)

பர்னி உமாபதி ராம் குண ஹர்ஷி கஏ கைலாஸ்
தபு ப்ரபு...... .. ||

(ஸ்ரீராமசந்திர பிரபுவின குணங் களை வர்ணித்த உமாபதியான சிவ பெருமான் மகிழ்ச்சியுடன கைலாசத் திற்குத் திரும்பினார்.)

இந்த ஸ்தோத்ரங்களை நடுநிலை மையுடன் நோக்கினால் சிவபிரா னுடைய ஸ்தானம் எப்படிப்பட்டது எனபதும, உத்தர ராமாயணத்தில் ஸ்ரீராமா (T.V. தொடரில்) ருத்ரா க்ஷம் அணிந்து லிஙக பூசை செய்து பாட்டுப்பாடியதாகக் காட்டியது எவ் வளவு பொருத்தமற்றது என்பதும் வெள்ளிடை மலையென விளங்கும் என்பதில் சிறிதும் ஐயமில்லை.

இனி அடுத்தக்கட்டுரையில் "கம்ப ராமாயணத்தில்" கம்பநாடனின் கருத்துக்களைக் காண்போம்.

(வளரும்)

# உணவிலும் உயர்ந்த தத்துவம்

நமது மதத்தில் கூறப்பட்டுள்ளவை எல்லாமே தத்துவங்களின் வடிவங்கள் ஆகும். அவற்றில் உணவின் தத்துவ விளக்கங்கள் இவை. சாதாரண உணவாலுங்கூட அரிதான ஆண்டவனை அடையும் வழியைச் சொன்னவர்கள் நமது பெரியோர்கள்.

சாப்பிடுவதற்குப் பூமியில் போடப்படும் பசுமையான இலையைப் போலவே மனிதப் பிறவி பசுமையானது என்று பூமியில் பிறந்த மனிதப் பிறவியைப் போற்றுகின்றனர் ஞானிகள். அதுமட்டுமல்ல, தலைவாழை இலை போட்டு விருந்து வைக்கும் தத்துவம் என்னவென்று தெரியுமா?

தலை + வாழை + இலை

**தலை :**

தலைதான் உடம்பில் தலைமையானது. "எண் சாண் உடம்பிற்குச் சிரசே பிரதானம்" என்று கூறுவார்களல்லவா? காரணம் சிரசில்தான் நிறைய செல்வங்கள் இருக்கின்றன. கண்ணில் ஒளியும், காதில் ஒலியும், மூக்கில் வாசமும், நாக்கில் சுவையும், வாயில் பேச்சும் என்று ஐந்து அரும் பெரும் செல்வங்கள் தலையில்தான் இருக்கின்றன.

"நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்" என்றாள் அவ்வை.

"செல்வத்துட் செல்வம் செவிச் செல்வம்" என்றார் வள்ளுவர்.

ஸ்ரீமத் பகவத்கீதையிலகூட பகவான், "நான்கு பக்தர்களில் செல்வத்தை விரும்புகிறவன் எனக்கு மிகவும் பிடித்தவன்" என்கிறார்.

"சதுர்விதா பஜந்தே மாம் ஜநா
ஸுக்ருதி நோர்ஜுநா!
ஆர்த்தோ ஜிக்ஞாஸுரர்தார்த்தீ
ஞ்ஞாநீ ச பரதர்ஷப!!"
கீதை 7-16

'அர்ஜுனா! துயரமடைந்தவன் முதல் பக்தன்; ஈசுவரத் தத்துவத்தை அறிய விரும்புகிறவன் இரண்டாம் பக்தன்; செல்வத்தை விரும்புகிறவன் மூன்றாம் பக்தன்; பகவத் தத்துவ ஞானம் பெற்றவன்.'

மேலே பகவான் சொன்ன பக்தர்களில் செல்வத்தை விரும்பிய பக்தர்கள் துருவனும், சுக்ரீவனும் ஆவர்.

ஆகவே, நாமும் அழிவு அற்ற இறை செல்வத்தை ஐம்புலன் மூலம் அறிந்து "ஆறாம் நிலையான ஞானத்தை அறிந்துகொள்" என்று தலை கூறுகிறது.

**வாழை :**

வாழை என்பது பிறவித் தொடரைக் குறிக்கும். ஆறாம் நிலையான ஞானத்தை நீ இந்தப் பிறவியிலேயே அடையாவிட்டால் வாழைபோல் தொடர்ந்து பிறவி எடுப்பாய்!

**இலை :**

அப்போதும், 'பசுமையான இலையைப்போன்ற' மனிதப்பிறவி கிடைப்பது மிகவும் கடினம். எனவே, "எச்சரிக்கையாய் இரு" என்று நினைவுபடுத்தவே தலைவாழை இலை போட்டு விருந்து வைக்கிறார்கள்.

"மனிதனே மயங்காதே! விழித்துக்கொள்" என்று உணர்த்துவதற்காகவே இலையில் தண்ணீரைத் தெளிக்கிறார்கள். இதனையே கீதையில் கண்ணன்,

"குதஸ்த்வா கசமலமிதம விஷமே
ஸமுபஸ்திதம்;

என்கிறார். (கீதை 2-2)

இதன் பொருள், "எழுந்து நில்; போர் துவங்கு, இந்த கச்மலம் என்ற மன அழுக்கை அகற்று; விழித்து எழு" என்பதாம்.

"இனித்தான் எழுந்திராய, ஈதென்ன பேருறக்கம்" என்பாள் ஆண்டாள்.

சுவாமி விவேகானந்தரும், "விழிமின், எழுமின்!" என்கிறார்.

"உறங்குவதுபோலும் சாக்காடு உறங்கி
விழிப்பது போலும் பிறப்பு"

என்கிறார் வள்ளுவர்.

அருட்சோதி இராமலிங்க சுவாமிகளோ, "பசித்திரு, தனித்திரு, விழித்திரு" என்கிறார். இதன் பொருளாவது: இறைவனின் அருட்பிரசாதம் அருந்த பசித்திருக்க வேண்டும்; தனிமையே இனிமை. ஆகவே தனித்திருக்க வேண்டும். மாயை என்ற அறியாமையில் மூழ்கி உறங்கிவிடக்கூடாது.

திரு. ஆர். மணிகண்டன்,
சென்னை-61

விழித்து எழுந்து ஞானஜோதியாகிய இறைவனை நினைக்க வேண்டும் அதற்காகவே ஒவ்வொரு வினாடியிலும் விழித்திருக்க வேண்டும். இப்படி பசித்து, தனித்து, விழித்திருந்தால், அப்போது கிடைக்கும் ப...த .வி. ஆகவே, இலையில் தண்ணீரைத் தெளிப்பதில் இத்தனைத் தத்துவங்கள் அடங்கியுள்ளன என்பதைப் புரிந்து கொண்டால், இலையிலுள்ள அழுக்கை நீக்க மட்டும் நீரைத் தெளிப்பதில்லை என்பது தெரிய வரும்.

இலையில் முதலிலே பரிமாறப் படுவது சொட்டுப் பாயசம். சுகம் என்பது லௌகீக உலகில் பெரிய விஷயமாகக் கருதப்படுகிறது,

ஆனால் அதையே சொற்ப இன்பம், 'சிற்றின்பம்' என்கின்றனர் ஞானிகள். இந்தச் சிறு இன்பத்தைவிட பெரிய இன்பம் இறைஞான பேரின்பம். அவ் வின்பத்தை அடைய வேண்டுமானால்

''கர்மண்யே வாதி காரஸ்தே மா
பலேஷு கதாசந ''—கீதை 2-47

'பற்றின்றிக் கடமையைச் செய்ய வேண்டும். நீ அடையவேண்டியபேரின் பத்திற்கு முன்னால் இது சிறு இன் பம்'' என்று உணர்த்தவே சொட்டு பாயசம் பரிமாறப்படுகிறது.

பிரதிபலனைக் கடந்துவிட வேண் டும். அதாவது 'பாவங்களை, பிரதி பலன்களைத் துறந்துவிட வேண்டும். களைந்துவிட வேண்டும்' என்பதற் காகவே, கடைந்த தயிர்ப் பச்சடியும், அதற்குப் பிறகு கிடைக்கும் புனித நிலையை நினைவுபடுத்துவதற் காகவே இனிப்புப் பச்சடியும்' பரி மாறப்படுகின்றன.

''சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம்
என்றைந்தின்
வகை தெரிவான்கட்டே உலகு''
—குறள் 27

சுவை, ஒளி, ஊறு, (மோகம்) ஓசை நாற்றம் (நறுமணம்) என்று கூறப்படு கின்ற இந்திரிய சுகங்களை ஆராய்ந்து, இயல்பில் அடக்கினவனே வல்லவன் என்பதால், '' மனிதனே, ஐம்பொறி களுக்கு அடிமையாகாதே, ஐம்பொறி களின் இயல்புகளையும் அறிந்து அதை அடக்கும் தன்மையைத் தெரிந்துகொள்'' என்று எடுத்துச் சொல்கிறது 'பொரியல்'.

'அவியல்' போல் ஐம்புலன்களை அவித்துவிடு. அவியலில் இரண் டொரு காய்கள் வேகாததுபோல் ஐம் புலன்களில் ஒன்றிரண்டைக் கட்டுப் படுத்துவது கடினம்.ஆகவே, தியானம் செய்வதில் தினமும் ஒரு நேரத்தை அதற்கென்று 'கூட்டு'. அத்துடன் அன்பைக் கூட்டு. அன்பே சிவம். 'மனிதனே, தெய்வீகக் குணங்களை உன்னுடன் கூட்டு'' என்று சொல்லா மல் சொல்கிறது 'கூட்டு'.

ஊறுகாயின நிறம் சிவப்பு. சுவையோ காரம். அதனால்தான் சிறிதே இலையில் வைக்கப்படுகிறது. நமக்குக் கோபம்வந்தால் கண்கள் சிவக்கும், பாவம் சண்டாளம்.

''தன்னைத்தான காக்கின்சினம் காக்க
காவாக்கால
தன்னையே கொல்லும் சினம்''
(குறள் 305)

ஆகவே, ஊறுகாயைப்போல் கோப மும் மிக மிகக் குறைவாக இருந்தால் தான் நல்லது. முடிந்தால் கோபப் படாமலே இருக்கலாம்.

வடை மற்றும் வறுவல் பண்டங் களை வைத்து பகவான் ஸ்ரீ ராம கிருஷ்ணபரமஹம்சர் கூறியுள்ள தத் துவங்கள் மிகச் சிறப்பானவை. ''சூடான எண்ணெயில் வடை அல்லது வறுவல் சாமான்களைப் போடும் போது பிரமாதமாக சத்தம் வரும். அந்த பண்டம் பொரித்தான பிறகு சத்தம் அடங்கிவிடும். அதுபோல, ஞானத்தைப்பற்றி அரைகுறையாக அறிந்து வைத்திருப்பவர்கள்தான் ஆரவாரமாகவிவாதம் செய்வார்கள்'' என்பார் குருதேவர்.

''மௌனம் சைவாஸ்மி குஸ்யாநாம்''
—கீதை 10-38

'இரகசியங்களில் நான் மௌனம்' என் றார் பகவான்.

ஒருவன் குடத்தை எடுத்துச் சென்று குளத்தில் முக்குகிறான். களக், முளக் என்று சப்தம் கேட் கிறது. குடம் நிறைந்த பிறகு மௌனம் அல்லவா? அதைப்போலவே மலர் மீது வண்டு அல்லது தேனீ அமர்ந்து, தேனைப் பருகும் வரை இர்...இர்... என்று சப்தமிடும். தேன் பருகத் தொடங்கிவிட்டால் நிசப்தம். பெரிய சந்தைக்குள் நுழையும் வரை கூச்சல் அதிகமாகக் கேட்கும். உள்ளே நுழைந்துவிட்டாலோ கூச் சலைப் பொருட்படுத்தத் தோன் றாது. சாப்பிட அமரும் வரை பந்தி யில் ஒரே சப்தம் கேட்கும். சாப் பிடத் தொடங்கிவிட்டாலோ சப்தம் அடங்கிவிடுகிறதல்லவா? ஆகவே, பரிபூரணம் அடைந்துவிட்டால் பேச செல்லாம் அடங்கிவிடும். மௌனம் ஞான நிலை' என்று உணர்த்து வனவே வடை மற்றும் வறுவல் பண் டங்கள்.

''லட்டு'' என்ற இனிப்பு இருக கிறதே, அது பல நூறு முத்துக்கள் இணைநத ஒரு பெரும் முத்து. நம் வாழ்நாளில் ஒவ்வொரு வினாடியும் ஒரு முத்து. பிறப்பு முதல் இறப்பு வரை பல நூறு நாட்கள் கொண்ட பெரிய லட்டுதான் நம்முடைய வாழ்க்கை.

''கால: கலயதா மஹம்''—கீதை 10-30
''கணக்கிடுபவர்களுக்குக் காலம் நான்''

காலம் முழுவதும் இறை வடிவம். அதை அவருககுச் சமர்ப்பணம் செய்ய வேண்டும். ''இமைப் பொழுதும் என் நெஞ்சில் நீங்கா தான்'' என்பார் மாணிக்கவாசகர். இமைப்பொழுதையும் வீணாக்க லாகாது. காலம் என்ற முத்துக்களை இறைவன்பால் சமர்ப்பணம் செய்து விட்டால் ஒவ்வொரு நாளும் நமக்கு மங்கலத் திருநாள்தான்.

இப்போது அன்னமாக இறைவன் எழுந்தருளுவார். அவருக்கு சாந்த மாகிய நெய்யை அர்ப்பணம் செய்ய வேண்டும்.

'' மனிதா! வெளி புலன்களில் இவ வளவு சாந்தம தேவைதானா? அதுவும் இந்தக் காலத்தில்? ஆகவே, சாம்பார்போல் காரசாரமாக இரு. ஆனால் உன புலன்களில் சாந்தம நிலைக்கட்டும்'' எனகிறது சாம்பார். இவ்விடத்தில் ஸ்ரீ ராமகிருஷ்ண பரம ஹம்சர் கூறும்சிறு கதையை நினவில் கொள்வது மிகப் பொருத்தமாக அமையும்.

ஒரு பாம்பு தான் வாழும் இடத்தி லுள்ள எல்லா மக்களுக்கும் துன்ப மிழைத்து வந்தது. அவ்வழியே பய

ணம் செய்த அகஸ்திய முனிவர், யாரையும் கடிக்க வேண்டாம் என பாம்புக்கு உபதேசம் செய்து சென்றார். அப்பாம்பும் யாருக்கும் துன்பம் தராமல் வாழத்தொடங்கியது. இதை அறிந்த மக்கள் பாம்பைத் துன்புறுத்தத் தொடங்கினார்கள் சில நாட்கள் கழித்து பாம்பின் இருப்பிடம் வநத அகஸ்திய முனிவர், பாம்பைக் கண்டு, 'உன் உடலில் இவ்வளவு காயங்கள் இருக்கக் காரணம் என்ன?' என்று கேட்டார். 'நீங்கள் செய்த உபதேசந்தான் என்னை இத்துன்பத திற்கு ஆளாக்கியது' என்றது பாம்பு. முனிவர் உடனே 'கடிக்காதே என்றுதான் கூறினேனேயொழிய, சீறாதேஎனறு செலலவில்லையே. உள்ளத்தில் அன்புவை; ஆனால் அடிமையாகாதே' என்று கூறினார். சாம்பார் நமக்கு இதைத்தான் நினைவுப்படுத்துகிறது.

ரசம் என்றால் சாரம் என்று பொருள். எல்லாவற்றிலும் சாரம் உள்ளது. வாழ்ககையின் சாரம இறைவனை அடைவதுதான்.

"பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவனடி சேரா தார்"

என்பார் வள்ளுவர்.

"ஸர்வ தர்மாந் பரித்யஜ்ய மாமேகம சரணம் வ்ரஜ ||
அஹம் த்வா ஸர்வ பாபேப்யோ மோக்ஷ யிஷ்யாமி மா சுச ||
(கீதை 18-66)

'எல்லாத் தர்மங்களையும் விடுத்து, என் ஒருவனையே சரணம் என்று அடைவாயாக! நான் உன்னை உன் சகல பாவங்களிலிருந்தும் விடுவிக்கிறேன், வருத்தப்படாதே!' என்கிறார் பகவான்.

## புத்தியின் உபயோகம்

ஓர் ஊரில் இரண்டு பிச்சைக்காரர்கள் இருந்தார்கள். ஒருவன் நொண்டி. மற்றவன் குருடன். இருவரும் நணபரானார்கள். அதன் படி இருவரும் ஓர் ஒப்பந்தம் செய்து கொண்டனர். குருடன மூதுகில் நொண்டி அமர்நது வழிகாட்ட, குருடன் நடக்க, இருவரும் பிச்சை எடுப்பது வழக்கம்.

ஒரு கிராமத்திலிருந்து மற்றொரு கிராமத்துக்குச் செல்லும்போது வழியில் ஒரு தோட்டத்தில் நிறைய வெள்ளரிக்காய் காய்த்திருப்பதை நொண்டி கண்டான். 'காவலாளி இருக்கிறானா' என குருடன் கேட்க, 'இல்லை' என்றான் நொண்டி. 'வேலியும் இல்லை' என்றான். 'வெள்ளரிக் காய் சுவைமிக்கதாயிருந்தால், எந்தக் குடியானவனும் காவலாளி இன்றியோ, வேலி இன்றியோ தோட்டத்தைவிட்டு வைத்திருக்க மாட்டான். இதிலிருந்து அவை தின்பதற்கு உதவாத, கசப்பு மிகுந்த காட்டு வெள்ளரிக்காயாக இருக்கும்' என்றான குருடன்.

குருடன் இந்த விஷயத்தில் தனது புத்திக் கூர்மையை உபயோகித்து உண்மையைக் கண்டறிந்தான். நல்லது எது கெட்டது எது என பிரித்துரைகக இயலாதவை உணர்ச்சிகள்(Senses). புத்தி இதைப்பிரித்துக் காட்டும். ஆனால் செயல்படுத்த இயலாது. ஏனெனில் புத்திக்குப் புலன் இல்லை.

திருமதி. கமலா மாரியப்பன்-கோவை.

அவனைச் சரணடைந்துவிட்டால் நாம் செய்த தீவினைகள் அனைத்தும் 'அப்பளம்' நொறுங்குவபோல் நொறுங்கிவிடும். பிறகு கிடைக்கும் அமிர்த நிலை! அதுவே, 'பாயசம்' எனற பேரின்பம். ஞானத்தின் வழி அமரத்துவ நிலை அடையலாகும். அப்படிப்பட்ட ஞானநிலை அடைந்துவிட்டால், கடந்த கால வாழ்க்கை 'மோர் சாதம்' போலப் புளிப்பாகத்தான் இருக்கும். உலகாயுதவாழ்வில் ஊறுகாயாக இருந்து நம் வாழ்க்கையைக் கடக்க உதவி செய்வார் இறைவன்.

இந்தப் பிறவித் துன்பத்திலிருந்து விடுதலை பெற்றுவிட்டால் அதன் பிறகு பேரின்ப மயம்தான்! இவ்வளவு ஞானத்தையும் அறிவதற்குள், அடைவதற்குள் சாப்பாடு முடிந்துவிட்டிருக்கும். ஆத்மா இறைவனிடம் ஒன்றிய பிறகு எச்சில் இலையை வீசி எறிவதுபோல் இந்த உடலைவிட்டுவிட்டு ஆத்மா இறைவனிடம் கலந்துவிடுகிறது.

இவ்விதம் அன்னமே நமக்கு ஆண்டவனைக் காட்டுகிறது. அன்னமே பிராணமயம். பிராணமே ஞானமயம். ஞானமே தத்துவமயம். தத்துவமே தெய்வீகமயம். தெய்வீகம் தெய்வத்திடம் ஒன்றவைக்கும் என்பதே சாப்பாடு கூறும் தத்துவமாகும். நாமும் தினந்தோறும் சாப்பிடும் போது மேற்கண்ட தத்துவங்களை நினைவில் வைத்து அன்னமாகிய இறைவனை அடைவோமாக!

ஸ்ரீ கிருஷ்ணார்ப்பணம்!



(12-ஆம பக்கத் தொடர்ச்சி)

## வைணவரின தாரக மநதிரம

வைணவரின் தாரக மந்திரம் "ஓம் நமோ நாராயணாய" என்பதாகும். இதன பொருள் : "பரம்பொருளாகிய நாராயணனுக்கு வணக்கம்". நாராயணனே சீவன்களின் ஆதாரம். சீவன் உடல் எனறால் நாராயணன் உயிர். சீவன தாங்கபபடுபவன் என்றால் நாராயணன் தாங்கும் தயாபரன். சீவன் பிரகிருதி வசப்பட்டவன் என்றால் நாராயணன் பிரகிருதியை ஆக்கவும் அழிக்கவும் வல்லவன். சீவன் ஈடேற்றம் தேடும் பொருள் என்றால் நாராயணன் ஈடேற்றம அருளவல்ல ஆண்டவன். எனவே, சீவன் நாராயணனை வணங்குவதே உய்வடைய உள்ள வழியாகும.

## விசிஷ்டாத்வைதம் - பொருள் விளக்கம்

வைணவப் பெரியாராகிய இராமாநுசர் வைணவக் கோட்பாடுகளைத் தொகுத்து வழங்கியுள்ளார். அக் கோட்பாடுகளே விசிஷ்டாத்வைதம் எனப்படும். வைணவம் சீவன், ஈஸ்வரன் ஆகிய இருவருடைய எப்போதும் உள்ள தன்மையை ஒப்புக்கொள்கிறது. ஆனால் ஈஸ்வரனின் சிறப்புக்களை நோககுமிடத்து சீவன் சிறுத்துப் போகிறான். சீவனிடத்து கருணை கொள்ளும் ஈஸ்வரன் தம் மங்கள ரூபத்தாலும், கல்யாண குணங்களாலும், லீலா விநோதங்களாலும் அருள் புரிகிறான். விசிஷ்டாத்வைதம் என்றால் சீவர்களை உடலாகக் கொண்ட ஈஸ்வரன் என்பது பொருளாகும். உள்ள பொருள் இரண்டானாலும் 'ஈஸ்வரனுக்கு உயர்ந்த பொருள் வேறில்லை' என பதே முடிந்த முடிபாகும்.

## வைணவம் கூறும் பிரபத்தி

இறைவனைச் சென்றடைய உள்ள வழிகள் பலவகைப்படும். அவற்றை கர்மவழி, ஞானவழி, பத்தி வழி என்ற மூன்றாக வகுத்துரைப்பர் வைணவர்கள். திருக்கோயில் தொண்டாற்றல், பாகவதரை உபசரித்தல் முதலாக தம்மால் செய்யக்கூடிய செயல்களில் சிலர் ஈடுபட்டுழைப்பர். இதுவே கர்ம மார்க்கம் எனப்படும். வேறுசிலர் இறைவனைப் பற்றிய சிந்தனையிலேயே மூழ்கியவராய் இறை ஞானத்தைப் பெருக்கிக்கொள்வர். இது ஞான மார்க்கம் எனப் படும். மற்றுஞ்சிலரோ இறைவனிடத்து ஆழ்ந்த காதல் உள்ளத்தவராய் பாடிப் பரவித் திரிவர். இது பக்தி மார்க்கம் எனப்படும். மேற் சொனன மூன்று மார்ககங்களும் தனித்தனியாகவே எப்போதும் பின் பற்றப்படும் என்று சொல்லிவிட முடியாது. கர்மம், ஞானம், பகதி என் பவற்றில்சிற்சில கூறுகளைஒவ்வொருவரிடததிலும் நாம் காணலாம். ஆனால் ஒருவரிடம் மிக்குள்ள தன்மையைக் கருதி அவரை கர்மவான் என்றோ, ஞானி என்றோ, பக்தன் என்றோ சொல்வோம்.

இந்த மூன்று மார்க்கங்களுக்கும் மேம்பட்டதாக பிரபத்தி என்ற நிலையை வைணவம் பேசுகிறது. இறைவனை விட்டால் தனக்கு வேறு கதியில்லை என்று அவனது திருவடிகளில் சரணாகதி அடைவதே பிரபத்தி நிலையாகும. அந்நிலையில் உறுதிப்பாடுடைய வைணவன இறைவனுக்கு உகந்த செயல்களிலேயே ஈடுபடுவான். இறைவனுக்கு விருப்பமற்ற செயல்களை நினைத்தும் பாரான். இறைவன் நம்மைக் காப்பாற்றியே தீருவான் என்ற உறுதியைப் பேணுவான். இறைவனிடத்துச் சரணடைநது காத்தருள வேண்டுவான். தனது கீழ்மையை உணர்ந்து அடக்கத்தோடு நடந்து கொள்வான். பிரபத்தி பண்ணுகிறவனுக்கு உடனடியாக இன்பதுன்பங்கள் அகலுகின்றன. வினைப்பந்தங்கள் விலகுகின்றன. வைகுநத வாழ்வும் வந்து சேர்கிறது.

## வைணவத்தை வளர்த்த பெரியார்கள்

வைணவத்தை வளர்த்த பெரியார்களில் நம் பன்னிரு ஆழ்வார்களுக்கும் மிகப்பெரிய இடமுண்டு. அவர்தம் பக்திப் பனுவல்களைப் பெற்றதால் தமிழும் தெய்வமணம் கமழவதாய்த் திகழ்கிறது. ஆழ்வார்கள் பகதியை ஒரு இயக்கமாக செயல்பட்டு வளர்த்தார்கள். அவர்களுடைய 'நாலாயிரத் திவ்ய பிரபந்தம்' தமிழ்நாட்டில் வைணவப் பக்திப் பயிரை நன்கு வளர்த்தது. வைணவம் தழைக்க வந்த பெரியார்கள், சமயாச்சாரியார்கள் ஆகிய ஆழ்வார்கள், சந்தானாச்சாரியர்களாகிய மெய்ப்பொருளியலார்கள் என்று இருவகையினராகப் பேசப்படுவர். எம்பெருமானின் பண்பு நலனகளில் ஆழ்ந்து நின்று பக்தி பனுவல்கள் இயற்றி பக்தி இயககத்தை வளர்ததவர்கள் ஆழ்வார்கள். சந்தானாச்சாரியர்கள் அறிவு வழியில் சமயச் சொற்போர் செய்து வைணவக் கொள்கைகளை நிலை நிறுத்தியவர்கள். இவ்வாறான ஆசசாரிய குரு பரம்பரையில் எம்பெருமானே முதல் ஆசாரியனாகவும் நம்மாழ்வார் பரமாச்சாரியர் என்றும் அழைக்கப்படுவர். நாதமுனிகள், ஆளவந்தார், இராமாநுசர்,வேதாந்த தேசிகர், பிள்ளை லோகாச்சாரியார், மணவாள மாமுனிகள் முதலிய மகான்களால் வைணவம் நிலை நிறுத்தப் பெற்றுள்ளது.

## முடிவுரை

பிறவித் தளைக்குட்பட்ட உயிர் வீடுபேறடைய மேற்கொள்ள வேண்டிய நடத்தை நெறி அல்லது இதம என்று சொல்லப்படும். அந்நெறி வழிச்சென்றால் அடையும் பயன உறுதிப்பொருள் அல்லது புருஷார்த தம் எனப்படும். இக்கட்டுரையினின்றும் நாம் நம் உயிர்க்கு இதம் தரும் நெறி வைணவ நெறி என்றும், அதனால் நாம் அடையலாகும் பயன் நாராயணனைச் சென்று சேர்வதாகும் என்றும் அறிந்துகொண்டோம். எனவே நாம் வைணவ நெறிக் கண நின்று நாராயணன் புகழ் பாடி உய்வடைவோமாக.

"நலம் தரும் செல்வம் தந்திடும்
அடியார் படுதுயராயின வெல்லாம
நிலம்தரம் செய்யும நீள்விசும்
பருளும் அருளொடு பெருநில
மளிக்கும்
வலம்தரும் மறறும் தந்திடும பெற்ற
தாயினும் ஆயின செய்யும
நலம்தரும் சொல்லை நான் கண்டு
கொண்டேன் நாராயணா வெனும்
நாமம்"

—திருமங்கையாழ்வார்



# ஐந்து அர்த்தங்கள்

திருமதி. மைதிலி வேணுகோபால்,
சென்னை-86.

எம்பெருமானுக்குக் கைங்கரியம் செய்யப் பெறுவதான 'பறை'யை விரும்பித்தான் ஆண்டாள் திருப்பாவை பாடினாள். விரும்பினால் மட்டும் போதாது. விரும்புபவர்கள் அர்த்த பஞ்சகமெனப்படும் ஐந்து விஷயங்களை முக்கியமாக உணர வேண்டும்.

நம்மால் அடையப்பட வேண்டிய ப்ரஹ்மத்தின் ஸ்வரூபம் எப்படிப் பட்டது என்று குறைவறத் தெரிந்து கொள்ள வேண்டும்.

நம்முடைய ஸ்வரூபம் எப்படிப் பட்டது என்று தெரிந்து கொள்ள வேண்டும்.

எம்பெருமானை அடைய நமக்கு என்னென்ன தடைகள்இருக்கின்றன, அதாவது எவை எவைகள் நமக்குத் தடைகளாய் இருக்கின்றன என்று தெரிந்து கொண்டு, அவற்றை நீக்கிக் கொள்ள வேண்டும்.

மோக்ஷத்திற்கான உபாயங்கள் எவை என்பது தெரிந்து கொள்ள வேண்டும்.

மோக்ஷத்தினால் கிடைக்கும் பலன்கள் என்ன என்பதை அறிதல் வேண்டும்.

இந்த ஐந்து விஷயங்களும்தான் அர்த்த பஞ்சகமெனப்படும்.





**ஸ்ரீமத் ஆண்டவன் சுவாமிகள் அருளாணையின்படி, கும்பகோணம் ஸ்ரீ சாரங்கபாணி சுவாமிக்கு சுவாமிமலை எஸ். கருணாநிதி ஸ்தபதியாரால் செய்யப்பட்ட அழகிய வெள்ளிக்கிரீடம். வி. பி. கே. மூர்த்தி - பாபநாசம்.**

இந்த ஐந்தையும் ஆண்டாள் நமக்கு எடுத்துக் காட்டியிருக்கிறாள்.

ப்ரஹ்மததின் ஸ்வரூபம் :

எம்பெருமான் ஸகல கல்யாண குணங்களையும் கொண்டவன். அவன் ஸத்யமே உருவானவன். அதிலிருந்து ஒரு போதும் மாறவே மாட்டான். உத்தமன் என்று அவள் கூறுவது இந்த ஸத்யமான, மாறுபடாத தன்மையைத்தான். அவன் பரம ஞானி, ஸர்வக்ஞன். இதை ஆண்டாள் மிகவும் அழகாக, (தோற்ற மாய் நின்ற) 'சுடரே' என்கிற பதத்தினால் விளக்குகிறாள். எம்பெருமான் எங்கே இருக்கிறான் என்று கேட்டால், என்ன சொல்வது? இங்குதான் இருக்கிறான் என்று சொல்ல முடியுமோ? ஏனெனில், அவன் எங்குமிருப்பவன். இப்போது இருக்கிறான். அப்போதிருக்கிறான் என்றாவது கூற முடியுமா என்றால், அதுவும் முடியாது. அவன், இப்போதும் இருப்பான், அப்போதும் இருப்பான், எப்பபோதும் இருப்பான். இதை 'நாராயணன்' என்று அடைமொழியினால், எடுத்துக் காட்டுகிறாள். அவன் ஆனந்தமே வடிவானவன். குறைவற்றவன். ''குறைவொன்றுமில்லாத கோவிந்தா'' என்கிறாள். 'ஆரா அமுதம்'' என்கிற சொல்லினால், இந்த ஆனந்தத்தை நாம் அறியலாம். ''நாச்சியார் திருமொழி'' (13.4)யில் 'ஆரா அமுதம் அனையான் தன் அமுதவாயில்' என்று அருளுகிறாள். தோஷமேயில்லாதவன். தோஷங்கள் எதுவும் அவனை அண்டவே அண்டாது. அதாவது விமலன்.''வீட்டைப் பண்ணி விளையாடும் விமலன் தன்னைக்கண்டீரே'' (14-9) என்பது தோஷமே அற்ற தன்மையைக் குறிக்கிறது.

இப்படிப்பட்டவன்தான் எம்பெருமான்; இதுதான் ப்ரஹ்ம ஸ்வரூபம்.

ஜீவாத்மாவின் ஸ்வரூபம் :

சரீரம், இந்திரியங்கள் போன்றவற்றிலிருந்து ஜீவாத்மா வேறுபட்டது. 'புனரபி ஜனனம்; புனரபி மரணம்-புனரபி ஜனனீ, ஜடரே சயனம்' - என்று ஜனன மரணச் சக்கரத்தில் சிக்கிச் சுழன்று கொண்டே இருப்பவன், எம்பெருமானைப் பற்றிய ஞானம் உடையவன். இப்படி ஜீவாத்மாவை எம்பெருமான் படைக்கிறான். பின்னர் தன் இஷ்டப்படி, எம்பெருமான் அருளிய இந்திரியங்கள், குணங்கள் ஆகியவற்றை ஜீவாத்மா உபயோகப்படுத்திப் பார்க்கிறான். இதுவே எம்பெருமானுக்கு லீலா ரஸமாகிறது. பெரியோர்கள், ஆசார்யர்களின் துணை கொண்டு, அவனை அடைய சில ஜீவாத்மாக்கள் முற்படுகின்றன. மற்றும் பல ஜீவாத்மாக்கள், மெய்யில் வாழ்க்கையை மெய்யெனக் கொண்டும் நூலின் நேரிடையார் திறத்தே நின்றுவிடுகின்றன. உண்டியே உடையே என்று உகந்து ஓடுகின்றன நன்னெறி இருக்க, தீயனவை நோக்கி ஓடுகின்றன. இந்த லீலா விபூதியில், ஜீவாத்மாக்களைப் படைத்துவிட்டு, எம்பெருமான் வேடிக்கைப் பார்த்துக் கொண்டு நிற்கிறான்.

விரோதி ஸ்வரூபம் :

அதாவது மோக்ஷத்தை அடைய ஏற்படும் தடைகள் காமம், குரோதம், லோபம், மோஹம், மதம், மாச்சரியம் ஆகியவைகள். எம்பெருமானை அடியே மறந்து, அல்ப மனிதர்களுக்கும், இதர தெய்வங்களுக்கும் அடிமைப்பட்டிருத்தல், அளவுக்கு மீறிய சோம்பல், தூக்கம், அஸத்தியம், நாஸ்திகவாதம் செய்வது போன்ற எல்லாமே தடைகளாக இருக்கின்றன. இருபத்து நான்காவது திருப்பாவையில் இந்த விரோதிகளை ஒருசேரக் காட்டியிருக்கிறாள்.



"சென்றங்குத்தென்னிலங்கை செற்றாய்" காமமே உருக்கொண்டு, மதியிழந்த இராவணனைக் காட்டி, நம்மை எச்சரிக்கிறாள். மூவுலகிலும் புகழ்க்கொடி, ஜெயக்கொடி நாட்டித்தான் என்ன? ஸாம வேதத்தையும், ஸங்கீதத்தையும் கரைத்துக் குடித்துத்தான் என்ன? யாராலும் சாகக்கூடாது என்ற வரத்தையும் பெற்றிருந்துதான் என்ன? சங்கரனே வாளைப் பரிசாகக் கொடுத்துத்தான் என்ன? காமம் என்கிற கொடிய பாவத்தால் குலத்தோடே அழிந்தானே!

"குன்று குடையாய் எடுத்தாய்!"- 'தனக்கு ஆயர்கள் வழக்கம் போல, விழா எடுக்கவில்லை. கண்ணன் பேச்சைக் கேட்டு, கோவர்த்தன மலைக்குத்தான் ஆராதனை நடக்கிறது' என்று இந்திரன் கடும் சீற்றம் கொண்டு, ஏழு நாட்கள் விடாது மழையை பெய்வித்து வாட்டினானே! கடைசியில் என்னவாயிற்று? கண்ணனைச் சரணடைந்தானே! கண்ணன உண்மையில் யார் என்று புரிந்து கொள்ளாது, பிரதிகூலனாக மாறினானே!



"கன்று குணிலா எறிந்தாய்" - கன்றுக்குட்டி வடிவில் வந்த வத்ஸாசுரனையே எறிதடியாகக் கொண்டு, விளாங்கனி உருவில் வந்த கபித்தா

சுரனை முடித்தாயே! ஒரு கல்லில் இரண்டு மாங்காய்களா? பேஷ், வத்ஸா சுரன் லோப குணத்தையும், கபித்தா சுரன் மாச்சரியத்தையும் குறிக்கின் றனர்.

"பொன்றச் சகடம் உதைத்தாய்" சகடாசுரனுக்குக் பலவித ஆசை வார்த்தைகள் கூறி, பெரிய பெரிய பதவி தருவதாயும், அதிகாரங்கள் தருவதாயும் ஆசை காட்டி, அவ னுக்குப் பதவி, அதிகார மோஹத்தை உண்டாக்கி, வளர்த்து, தியாக எரிய விட்டு, கண்ணனை முடித்திட அனுப்பி வைத்தான். முடிவில் மோஹம் வீழ்ந்து பட்டது.

"அன்று இவ்வுலகம் அளந்தாய்!"- அஹங்காரம், மமகாரம், மமதை ஆகி யவற்றின் மொத்த உருவம் மஹா பலி. எல்லாமே எம்பெருமானுடை யது, அவனாகப் பார்த்து, நமக்கிட்ட பிச்சை இது, "அவனது கைக்கருவி தான் நாம்" என்று எண்ணாது 'மூவு லகமும் என்னுடையது-என் ஆட்சிக் கும் அதிகாரத்துக்கும் உட்பட்டது. ஒருயாகம் செய்யப் போகிறேன்-யார் வேண்டுமாயினும், எதை வேண்டு மாயினும், யாசித்துப் பெற்றுக் கொள்ளலாம்' என்று பறையடித்து அறிவிக்க என்ன ஆணவம் இருக்க வேண்டும்?

கண்ணன் எழுந்தருளுகையில், துரி யோதனன் முதலானோர் 'என் இல் லத்துக்கு வா', 'என் மாளிகைக்கு வா' என்று மமகாரத்தால் பிதற்றிய தால்தான், கண்ணன் அங்கெல்லாம் காலடி வைக்காது, "கண்ணா, உன் னுடைய இல்லத்துக்கு எழுந்தருள்" என்று விதுரர் தன் க்ருஹத்தை காட்டியபோது, அவரது பக்தியைக் கண்டு, அவர் இல்லத்துக்கு எழுந் தருளினான்.

இத்தனைக்குணங்களுமே அவனை அடையத் தடைகள். இதனை நன் றாக உணர வேண்டும்.

உபாய ஸ்வரூபம்:

எம்பெருமானை அடைய என் னென்ன உபாயங்கள் இருக்கின்றன, அவை எப்படிப்பட்டவை என்பதே உபாய ஸ்வரூபம். எம்பெருமானை அடைய பக்தி செய்ய வேண்டும்.

முதல் காரியமாகப் பாகவதர்கள்- அதாவது எம்பெருமானின் பக்தர் கள்மீது அன்பாயிருக்க வேண்டும். அவர்கள் உள்ளத்தைக் குளிரவைக்க வேண்டும். ஆண்டாள், தோழிகளை எழுப்புவது போல, பக்தர்களை அன் பாக அழைக்கிறாள். பிள்ளாய், நாயகப் பெண் பிள்ளாய், தேசமுடை யாய், கோதுகலமுடைய பாவாய், மாமான் மகளே, ஆற்ற அனந்த லுடையாய், அருங்கலமே, பொற் கொடியே, புனமயிலே, நற்செல்வன் தங்காய், போதரிக் கண்ணினாய், பாவாய், நங்காய், நாவுடையாய், இளங்கிளியே, என்றெல்லாம் அடை மொழிகளிட்டு அன்பு காட்டுகிறாள்.

பகவானை ஆராதிப்பதில், அவன் சரித்திரத்தைக் கேட்பதில் ஆர்வ மாக இருக்க வேண்டும். அவனைப் பற்றிப் பேசினால், குரல் தழதழத் துக, கண்ணீர் பொழிய வேண்டும்.

அவனை ஆராதிக்க முற்பட்டு தான் மார்கழி நீராட்டமும், விரத மும் மேற்கொண்டாள். எளிமை யாக இருக்க வேண்டுமென்றுதான், மை இட்டு எழுதிக் கொள்ளாமல், மலரிட்டு முடியாமல் இருந்தாள். உடலைப்பேணுவதில் கவனம்செல்லக் கூடாதென்று நெய்யுண்ணாது, பாலுண்ணாது இருந்தாள்.

அவனிடம் அற்பப் பலன்களை யாசிக்காமலிருக்க வேண்டும். மற்றை நம் காமங்கள் மாற்று என்று ஆண் டாள் வேண்டியது, நம்மை எண்ணித் தான். எம்பெருமானைத் தவிர, அவனது லட்சியம் வேறெதுவுமே இல்லை. அதனால்தான் முதற் பாட்டிலேயே, 'நாராயணனே நமக்கே பறை தருவான்' என்று, தன்னுடைய லக்ஷ்யத்தை கோடி காட்டிவிட்டு, கண்ணன் முகம்காட்டியதும், அவன் மடியைப் பிடித்து, பறை என்கிற கைங்கர்ய ஸ்ரீயைப் பெற்று, 'அங்கப் பறை கொண்ட ஆற்றை" என்று- தான் பறை பெற்றுவிட்ட இனிய சேதியை, நமக்கும் தெரிவித்துவிட் டாள். அவன் கற்பக விருக்ஷம், அவ னிடம் போய் கந்தைத் துணியையா கேட்பது?

பலன்:

இப்படிப்பட்ட உறுதியான பக்தியை அனுஷ்டித்தால் எம்பெரு மான், மனமகிழ்ந்து, ஆனந்தமே வடி வான பரமபதத்திலே, தன் திருவடி களுக்கு நித்திய கைங்கர்யம் செய்து வருகின்ற நித்ய முக்தர்களுடன் ஒன்று சேர்ந்து கொண்டு, இது வரையிலே ஜீவாத்மா இழந்துவிட் டிருந்ததையெல்லாம் தந்துவிடுவான்.

இவ்வாறு அர்த்த பஞ்சகத்தை அழ காக அருளியிருக்கிறாள் ஆண்டாள். ஸ்ரீ வைஷ்ணவத்துக்கே உரித்தான தனிச் சிறப்பு வாய்ந்தது. வேதத் திலே சொல்லப்பட்டிருக்கிற இவை எல்லாவற்றையுமே ஸாரமாக, எளிமையாக ஆண்டாள் பாடியிருப்ப தால், ஆண்டாளின் அவ் இலக்கிய அமுதத்தைப் படித்தாலும், கேட்டாலும், பாடினாலும், வேதம் ஓதுவதனால் ஏற்படக்கூடிய ஞானத்தைவிட அதிக ஞானமும், வேதத்தை ஓதுவதனால் கிடைக்கக் கூடிய பலன்களைவிட அதிகப் பலன் களும் கிடைக்கும் என்பது ஸத்திய மான வாக்கு.



# குரு பக்தியே இறை பக்திக்கு வழி

குழந்தைகளே! உங்களுக்குக் கதை கேட்பது என்பது தேன் சுவை போல தித்திக்கும் அல்லவா! உங்களுக்கு மாத்திரமல்ல, சிறியவர் முதல் வயது முதிர்ந்த பெரியோர் வரை அவரவர் மனோநிலைக்கு ஏற்ப ஆர்வமுடன் கதை கேட்பதும், கதை சொல்வதும் நடைபெற்று வருகின்றது.

இளம் வயதில் இராமாயண, மகா பாரதக் கதைகளின் வீர தீரச் செயல்களை தாயாரான ஜிஜாபாய், மற்றும் ஆசிரியர் தாதாஜி காண்டதேவ் கூற அதை உன்னிப்பாகக் கேட்டு தானும் வீரமிக்க செயல்களைச் செய்ய ஆசைப்பட்டுப் பின்னர் மாவீரனாக, சத்ரபதி சிவாஜி விளங்கினார் அல்லவா!

அரிச்சந்திர நாடகம்தானே தேசப்பிதா மகாத்மா காந்தியடிகளை உண்மை பேசும் உத்தமராக்கியது.

அதுமட்டுமா! இந்துமத மறுமலர்ச்சிக்கு வித்திட்ட சுவாமி விவேகானந்தர் அரிய செயல் புரிய இராமகிருஷ்ண பரமஹம்ஸர்தானே காரணம்.

எண்ணற்ற மகான்களும் கேட்டு, படித்து, மனம் பக்குவப்பட தாய், தந்தை, குரு, இவர்களில யாரேனும் ஒருவர் வழிகாட்டியாக விளங்கியதை நாம் அறிகிறோம்.

இருள் நீக்க ஒளிதர விளக்கு வேண்டும். அதுபோல் அறியாமை இருள் நீங்க ஆசான் என்னும் ஒளி வேண்டும்.

ஞானக் குழந்தையாம் ஞானசம்பந்தருக்கு வேதநாயகனின கட்டளைப்படி வேதவல்லியாம் உமையம்மை ஞானப்பால் அருளியப் பின் அருட்கடலாகிய இறைவனைப்பற்றி அகிலமெல்லாம் பாடல்களால் பக்தியைப் பரப்பினார் திருஞானசம்பந்தர்.

இதுபோல் எணணற்ற முனிவரும் ஞானியரும் குருவின் துணை கொண்டே குரு பக்தியால் இறையருள் பெற்று இவ்வுலகில் என்றும் சிரஞ்சீவியாய் விளங்குகிறார்கள்.

குருபக்தியால் சிறந்த மாணவனை இன்று தெரிந்து கொள்வோம். ஒரு வன வேடனின் மகன்—சிறுவன் பாரதத்தில் பெற்ற புகழ் யாது எனக் காண்போம்.

திருதராஷ்டிரன் என்ற மன்னனின் மக்கள் நூறுபேர் கௌரவர்கள் எனப்படுபவர். பாண்டு என்பவர் திருதராஷ்டிரனின் சோதரர். அவரது பிள்ளைகள் ஐந்துபேர் பஞ்ச பாண்டவர் எனப்படுவர். இவர்களின் ஆசிரியர் துரோணாச்சாரியர் ஆவார்.

கல்வி போதிக்கும் ஆசிரியருக்கு மன்னன் விதித்த கட்டுப்பாடோ, மன்னர் மக்களுக்கன்றி மற்றவர்க்குக் கலைகள் போதிக்கக் கூடாது என்பதாம்.

கௌரவர்களுக்கும், பாண்டவர்களுக்கும் மன்னர்க்குரிய கலைகள் யாவும் கற்பித்துவந்தார். அத்துடன் போர்க்கலைகளான யானையேற்றம், குதிரை ஏற்றம், வாட்போர், மல்யுத்தம், வில்வித்தை, கதாயுத்தம், சிலம்பம் போன்றவைகளை அவரவர் திறமைக்கு ஏற்ப கற்பித்து வந்தார்.

இதில் அர்ச்சுனன் வில்வித்தையில் மிகச் சிறப்புற்று வில்லுக்கோர் விஜயன் எனப் புகழ்கொண்டான். தன்னைவிட சிறந்த வில்லாளன் இல்லை என கர்வம் கொண்டான். கௌரவர்களுக்குப் பொறாமை ஏற்பட்டதை அறிந்த துரோணர், ஒரு நாள் மாணவர்களுடன் ஒரு ஆலமரத்தடியில் தங்கியிருந்தபோது, ஆலமரத்தில் இருக்கும் ஒரு கிளியின் கால்களில் அம்பால் அடித்து வீழ்த்த வேண்டும் என்று கூறினார்.

ஒவ்வொருவராக அழைத்தார். "உனக்கு என்னதெரிகிறது?" என்று கேட்டார். 'கிளி தெரிகிறது, அருகில் இலை இருக்கிறது, கிளையில் கிளி இருக்கிறது, இறக்கையைவிரிக்கிறது' எனப் பலவாறு பலரும் கூறினர்.

ஆனால் துரியோதனனோ "கிளியின் கால்கள்மட்டும் தெரிகின்றன' என்றான். வில்லை எடுத்து நாண் ஏற்றியதுதான் தெரிந்தது. கிளியின் கால்களில் அம்பு பட்டு அடுத்த வினாடியே கிளி கீழே வீழ்ந்தது.

---

திரு. வெ. சுந்தரம்,
பரமக்குடி.

---

"பார்த்தீர்களா ஆசிரியர் கூறியதைக் கவனமாகக் கொண்டு கவனம் சிதறாமல் இருப்பதுதான் வெற்றிக்கு வழி. மனம் ஒருமைப்பட்ட பக்தியே சக்தி தரும். அச்சக்தியே முழுமை பெற்று இறைவனையும் தன்னுள் அடக்கும். இதை உணராமல் பொறாமை கொண்டால் வெறுமை தான் மிஞ்சும்", என அறிவுறுத்தினார்.

தற்செயலாக அப்பக்கம் வந்தான் ஒரு வேடுவச் சிறுவன். ஆங்கு நிகழ்ந்தவை யாவையும் மிக்கக் கவனமுடன் கேட்டும், பார்த்துக் கொண்டுமிருந்தான்.

துரோணர் கூறிய நல்லுரைகள் தனக்கே கூறியதாக உணர்ந்தான். அவரைத் தன் குருவாக மனத்தில் இருத்திக்கொண்டான்.

துரோணர் அருகே சென்று சாஷ்டாங்கமாக அவர் கால்களில் பணிந்தான். தன்னை ஆசீர்வதிக்க வேண்டுமென்றான்.

"பூரண நல்லாசிகள் உண்டு. எழுந்திரு" என்றார் "நீ யாரப்பா, உனக்கு என்ன வேண்டும்?"

'ஐயா, நான் வனவேடுவச்சிறுவன். என் பெயர் ஏகலைவன்'. வில்வித்தை எங்கள் குலத்தொழிலாயினும் முறைப்படி உங்களை குருவாகக் கொண்டு சிறந்த பயிற்சி பெற விரும்புகிறேன். என்னை உங்கள் மாணவனாக ஏற்க வேண்டுகிறேன்".

"அரசகுமாரர்களுக்குப் போதிக்கும் போது மற்றவர்களை உடன் சேர்த்துக் கொள்வதில்லை என வாக்குறுதியை மன்னருக்குத் தந்திருப்பதால் உன்னை மாணவனாக நான் ஏற்க முடியாதே".

"உங்கள் மாணவனாகத்தானே என்னை ஏற்றுக் கொள்ள முடியாது. நான் உங்களை ஆசானாக, என் தெய்வமாக ஏற்றுக் கொள்ளத் தடை இல்லையே."

ஏகலைவனின் இந்தக் கேள்வியினால் அவரிடம் அவன் கொண்டுள்ள பக்தியைக் கண்டு பூரித்தார் ஆச்சார்யார். அனைவருமே வியந்தனர் அவனது அறிவின் நுட்பம் கண்டு.

"உன் மனோ நிலைப்படியே நடந்து கொள்" என ஆசி வழங்கினார் துரோணாச்சார்யார்.

அவரை மீண்டும் வணங்கி எழுந்து, தன் மனத்தில் அவரை உருவகப் படுத்திக் கொண்டு அவ்விடம் விட்டகன்றான்.

தான் வாழும் முடிசைக் கருகில் ஓர் அரசமரம் ஓங்கி வளர்ந்து விலாசமாகக் கிளைகளை விரித்து பெரு நிழல் தந்து கொண்டிருந்த இடமே சிறந்ததாகத் தேர்ந்தெடுத்து, அங்கு ஒரு பீடம் அமைத்து குரு தேவரைப் போல உருவம் அமைத்தான்.

புத்தம் புதிய மலர்களை நித்தம் நித்தம் கொணர்ந்து, பூசை செய்வான் குரு தேவரின் உருவத்திற்கு. அம்மட்டோ! அவர் நேரில் இருந்து தனக்கு அறிவுரையும், கல்வியும் போதிப்பதாகவும் கற்பனை செய்து கொள்வான்.

"குருதேவா, தங்கள் ஆசியின்படி அந்த மரத்து மலரை வீழ்த்துகிறேன். இந்த மரத்தின் கனியை வீழ்த்துகிறேன். மூன்று இலைகளை ஒரு அம்பால் துளைக்கிறேன். ஒரே அம்பினால் ஐந்து மரத்துக் கிளைகளைத் துளையிடுகிறேன்' எனக் கூறி பக்தியுடன் புதிய புதிய யுக்திகளால் வில் வித்தையினைப் பயின்று வரலானான் ஏகலைவன்.

காலதேவன் கடமையைச் செய்யக் காலம் உருண்டு ஓடியது. அதாவது சில ஆண்டுகள் கழிந்தன.

ஆச்சார்யாரும் மாணவர்களும் வேட்டை முறைகளை விரிவுபடுத்த வனத்திற்கு வந்தனர். அவர்களுடன் அர்ச்சுனன் வளர்த்த அருமை நாயும் உடன் வந்தது.

வேட்டைக்கு வந்தோர் அனைவரும் ஓரிடத்தில் தங்கியிருந்தனர். அங்குமிங்கும் ஓடிக்கொண்டிருக்கும் குணமதைக் கொண்ட நாயோ அவர்களை விட்டுப் பிரிந்து சென்று கொண்டிருந்தது.

துரோணரின் உருவம் அமைக்கப்பட்ட பீடத்தில் அதற்கே உரித்தான இயற்கைக் குணத்தால் சிறுநீர் கழித்துவிட்டது. அதைக் கண்ணுற்ற ஏகலைவன் வில் எடுத்து தான் புது முறையில் சில நாட்களாகப் பயின்று வரும் முறைப்படி அம்பை ஏவினான்.

அம்பு அந்த நாயினைத் துளைக விட்டுத் திரும்பியது. வேதனை தாளாமல் குரைத்துக் கொண்டே அர்ச்சுனன் இருக்குமிடத்திற்கு ஓடியது.

நாயின் உடலில் பல துளைகள் ஏற்பட்டு இரத்தம் கசிவதைக் கண்ட அர்ச்சுனன் ஆத்திரம் கொண்டான்.



ஸ்ரீ விட்டலேஸ்வரர் கோயில்-ஹம்பி.

பச்சிலைகளைப் பறித்து புண்ணுக்கு வைத்தியம் செய்துகொண்டே ஆச்சாரியாரிடம், "சல்லடைக் கண்களாகத் துளைத்துள்ள தனமையைப் பார்த்தீர்களா? இம்மாதிரி அம்பினை எய்திடும் கலையை எனககு மட்டுமே கற்பித்ததாகக் கூறினீர்கள். வேறு யாருக்கோ கற்றுத்தந்திருப்பதை இந் நாயின் மூலம் உணருகிறேன். இப் படித் தாங்களே செய்யலாமா?" என வினவினான்.

இளங்குமரப் பருவத்தினன் துடிப்பை உணர்நது புன்னகையுடன், "உன் கோபம் நியாயமாக இருக்க லாம். என்னைத்தவிர வேறு யாரும் அறியார் இக்கலை என்பதனால் என்னை சந்தேகிக்கிறாய். உண்மையை உணர நாமே நாயினை அழைத்துக்கொணடு சென்று, அறிய முயற்சிப்போம்"என்றார் துரோணர்.

அடிப்பட்டுச் சென்ற நாயின் குருதி சிந்திய அடையாளம் கொண்டு துரோணர் முதலானவர் வர, அதே போல நாயின் சொந்தக்காரர் யாரென அறிய ஏகலைவனும் வந் தான்.

குருநாதரைக் கண்டமாத்திரத்தில் அவரது திருவடிகளில் வீழ்ந்து வணங் கினான்,

"நீ யார்—உனக்கென்ன வேண் டும்?"

"குருதேவா! நான்தான் ஏகலை வன். தாஙகள் எனனை மாணவ னாக ஏற்க மறுத்தீாகள். ஆனால் என் குருவாக தங்களை நான் ஏற்க அனுமதித்தீர்களே. உங்கள் அருளா சியால் விலவிததையில் ஓரளவு சிறந்து விளங்குகிறேன".

"அது சரி. இந்த நாயை இப்படி வதைத்தவர் யாா எனத் தெரியுமா?"

"தெரியுமா என்றா கேட்கிறீர்கள். தங்கள் மாணவனாகிய நானதான் ஐயா?"

"இந்த முறையைக் கற்றுத்தந தவர் யாரோ?" "தாங்கள்தான் ஐயா".

"நானா? எப்போது நான் உனக் குக் கற்பித்தேன்? நீஎப்போது பயின் றாய்?"

"குருதேவா, என் குடிசைக்கு எழுநதருள வேண்டும். அப்போது சகலமும் தாங்கள் அறிவீர்கள்".

துரோணரும் சமமதித்தார். தன் மாணவர்களுடன் ஏகலைவனைப் பின் தொடர்ந்தார்.

அரச மரத்தடியில் பெரியதொரு பீடம். பீடத்தின்மீது துரோணாச் சாரியார் போனறதொரு உருவம். உருவமோ மலர்மாலைகளால் அலங் கரிக்கப்பட்டுள்ளது. பீடமதில் மலர் கள் நிரம்பிக்கிடக்கின்றன.

துரோணர் உட்பட அனைவருக் கும் அதிர்ச்சி. குருபக்தியாலேயே கலைகளில் சிறந்த ஏகலைவன் மீது துரோணருக்கு மிக்க மதிப்பு ஏற் பட்டது. இந்த ஏகலைவனைக் கொண்டே அர்ச்சுனனின் கர்வத்தை யும் அடக்கி, அனைவருக்கும் பக்தி யின் மேன்மையை உணர்த்த எண் ணங்கொண்டார்.

"என்னை உந்தன் குருவாக ஏற் றுக் கலை பயின்றிருக்கிறாய். உன் குருபக்தியை மெச்சுகிறேன். ஆனால் குரு தக்ஷிணை ஏதும் தரவில்லையே?" என ஏகலைவனிடம் துரோணர் கேட் டார்.

"வனத்துறை வேடனான இவ் வேழை தங்கள் கட்டளைக்குக் காத் திருக்கிறேன். குருவே தெய்வம். எனவே தெய்வ வாக்கைக கொண்டுச் செயல்படுவேன்" என்றான ஏகலை வன்.

"அப்படியா! மிகக சந்தோஷம். உனது வலது கைப் பெருவிரலை குரு தக்ஷிணையாகத் தர முடியுமா?" என்றார்.

வில்லாற்றலுக்குப் பெருவிரல் இல் லாது பயன்படாதே என்று சிறிதும் எணணாது, இடையிலிருந்து கூரிய கத்தியை எடுத்து வலது கைக் கட்டை விரலைத்துண்டித்துக் குருதேவருக்குக் காணிக்கையாக்கினான்.

பார்த்துக்கொண்டிருந்தோர் அனைவரும் தஙகளையும் மறந்து பிரமித்து ஆசானிடம் ஏகலைவன் கொண்டுள்ள பக்தியை நினைத்து மெய்சிலிர்த்தனர்.

இந்நிகழ்ச்சிகளைக் கண்ட அர்ச் சுனன், தான் குருவிடம் அகந்தை யோடு பேசியதற்கு வெட்கப்பட்டு பக்தியின் மேன்மையை உணர்ந்து மன்னிப்புக் கோரினான்.

அப்போது ஏகலைவன் உட்பட அனைவருக்கும் ஆசார்யார் உப தேசம் செய்தார்.

"உலகில் மிக அரியதானது மானி டப் பிறவி. மாதா, பிதா, குரு ஆகிய மூவரும் இறையருளைப் பெற வழி காட்டிகள். எனவே இம்மூவரையும் கண் முன் காணும் முழுமுதற் கடவு ளாகக் கொண்டனர்.

இறைவன் அருளுக்கு பக்தி செலுத் தப் படவேண்டும். இறை பக்திக்கு குரு பக்தி படிக்கட்டாகும். இறைவனை எளிதில் எல்லோரும், எப்போதும் காண முடியாது. ஏவ்வுருவிலும் இறைவன் இருக்கலாம். அவ்விறை வனை உருவகப்படுத்தி சிலா ரூபமாக வைத்து வணங்குவது இறையை நேரில் கண்டு ஆசி பெற்று நன்மை களான செயல்கள் தொடங்குவதற் கொப்பானது சிலை வடிவ வழிபாடு.

இவ்வுண்மையை வெளிப்படையாக ஏகலைவன் நிரூபித்துக் காட்டிவிட் டான். மனத்தை ஒருமைப்படுத்திச் செய்யும் செயல் வெற்றி பெறும். அதுவே இறைபக்திக்கும் வழியாகும். இதனாலேயே 'மாத்ருப்யோ நம: பித்ருப்யோ நம: குருப்யோ நம: சர்வதேவதஸ்யோ நம:' என்றனர் முன்னோர்கள்!" என்ற தத்துவங் கள் கூறினார்.

அதை மனத்தில் இருத்திய அர்ச் சுனன் கண்ணனிடம் செலுத்திய அபரி

மித பக்தியால் அர்ச்சுனனுக்கே பின் னர் தேர் ஓட்டும் சாரதியானார் கண்ணன்.

பாண்டவர்கள் கண்ணனிடம் கொண்ட பக்தியால் பாண்டவருக்குத் துணை நின்றார் கண்ணன். எனவே குருபக்திசித்திக்கு வழி இறைபக்திமுக் திக்கு வழி என்பதை உணர வேண்டும். " குரு பக்தியே இறைபக்திக்கு வழி " என்பதை உணர்ந்து தாயும், தந்தை யும் முதலில் குருவாக இருப்பதா லும் கல்விக் கேள்விகட்கு ஆசான் அமைவதாலும் இம்மூவருமே குருவா கின்றனர்.

குருபக்திக்கு மனத்தைப் பக்குவப் படுத்துவதே இறைபக்திக்கு எளிய வழிகாட்டுவதாகும். பக்தியின் தன் மையால் இந்நில உலகில் நிலைத்த புகழ்கொள்ளல் வேண்டும். உண் மைப் பக்தியே உயர்வினைத் தரும்.

எனவே பள்ளிப்பருவத்தில் கலை களிலும், கற்பிக்கும் ஆசான்களிட மும் காட்டும் பக்தி காளைப் பருவத் திற்குப் பின்னும் கனிவான இறை பக்திக்கு வழியாகும் என்பதை உணர்ந்து சிந்தித்துச் செயல்படுவது சிறப்பினை நல்கும். வாழ்க! வளர்க! இறையருள் பெருக.



---

(4-ம் பக்கத் தொடர்ச்சி)

களாகிய நாம் நமது பெருமையினை நாமே அறியத் தவறி வருகின்றோம் என்று குறிப்பிட்டு, வேதங்கள் மற் றும் இந்திய இலக்கியங்கள் பற்றி அறியும்படியாக எளிய நடையில் நூல்கள் வெளியிடப்பட வேண்டிய தன் அவசியத்தைப் பற்றி மேலும் கூறினார்.

**கட்டிடக்கலைப் பள்ளி :**

திருப்பதியிலுள்ள தி. தி. தே. மாட்டுப்பண்ணை வளாகத்தை அடுத்து உள்ள பகுதியில் விரைவில் தி. தி. தே. தென்னிந்திய கட்டிடக் கலை பள்ளி ஒன்று நிறுவப்பட உள்ள தாக தி. தி. தே. தலைமைப் பொறி யாளர் திரு. டி. பாஸ்கரராவ் அவர் கள் அண்மையில் பத்திரிகையாளரு டன் பேசுகையில் குறிப்பிட்டார். ரூ. 1 கோடி செலவில் கட்டப்படும் கட்டிடத்தில் ஓவியம், சிற்பம், மரம் மற்றும் செப்பு வேலைப்பாடு சம் பந்தப்பட்ட துறைகள் செயற்படும் என்றும் முதல் கட்டமாக 160 மாண வர்கள் சேர்த்துக் கொள்ளப்படுவார் கள் என்றும் அவர் கூறினார்.



**குழு முடிவுகள் :**

அண்மையில் திருமலையில் கூடிய சிறப்பமைப்புக் குழுவில் தீர்மானிக் கப்பட்ட முக்கிய முடிவுகள் பின் வருமாறு:

தற்போது திருப்பதியிலுள்ள தேவஸ்தான தலைமை அலுவலகத் தில் செயற்பட்டு வரும் உடல் ஊன முற்றோர்களுக்கான ஸ்ரீ பாலாஜி மருத்துவமனைக்கான புதிய கட் டிடத்திற்கென ரூ. 3 கோடி ஒதுக்கப் பட்டுள்ளது.

காஞ்சிபுரத்தில் ரூ. 30 இலட்சம் செலவில் தி. தி. தேவஸ்தான சத் திரம் ஒன்று விரைவில் கட்டப்பட உள்ளது.

திருப்பதியில் முடியும் தருவாயில் உள்ள நவீன மருத்துவமனைக் கட் டிடத்தில் நவீன மின்சார இயந்திரக் கருவிகள் நிறுவுவதற்கென ரூ. 3.5 கோடி ஒதுக்கப்பட்டுள்ளது. இம் மருத்துவமனைக்கான தனி மின் நிலையம் ஒன்றும் நிறுவப்படும்.

திருப்பதியிலுள்ள அரசு ரூயா மருத்துவமனையில் 'புற்று நோய்ப் பிரிவு' சம்பந்தமான கருவிகளை வாங்குதற்கு ரூ. 15.35 இலட்சம் ஒதுக்கப்பட்டுள்ளது.

இந்த நிதியாண்டிலிருந்து திருப்பதி யிலுள்ள திருவேங்கடவன் பல்கலைக் கழகத்திற்கு ரூ. 12 இலட்சமும், ஸ்ரீ பத்மாவதி மகளிர் பல்கலைக் கழகத் திற்கு ரூ. 15 இலட்சமும் வருடாந் திர மான்யமாக வழங்க முடிவு ஒன்று மேற்கொள்ளப்பட்டுள்ளது.

திருமலையிலுள்ள குடில்களை மேலும் நவீன படுத்துவதற்கென்று ரூ. 35.8 இலட்சமும், திருப்பதியில் கபில தீர்த்தம் பகுதியிலிருந்து நகரத் திலுள்ள இரயில் மேம்பாலம் வரை இரண்டு வரிசை சாலை ஒன்றினை வேய ரூ. 25 இலட்சமும் ஒதுக்கப் பட்டுள்ளன.

திருமலையில் குடிநீர் பங்கீட்டு வசதியை மேலும் சீராக்கும் வகை யில் புதிய குழாய்களை அமைப் பதற்கு ரூ. 9.60 இலட்சம் ஒதுக்கப் பட்டுள்ளது.

திருமலையில் சுகாதாரமான முறை யிலும், விரைவாகவும் கோயில் பிரஸாதமான லட்டுகளை தயாரிக்க ஒரு புதிய கலவை இயந்திரத்தினை வாங்குவதென்று குழு முடிவு செய் துள்ளது. இதற்கென ரூ. 12.2 இலட் சம் ஒதுக்கப்பட்டுள்ளது.

தி. தி. தேவஸ்தான ஊழியர் களும், யாத்திரிகப் பொது மக்களும் மருத்துவ வசதி பெறும் திருமலை மற்றும் திருப்பதியிலுள்ள தேவஸ் தான மருத்துவ மனைகளில் மருந்து கள் வாங்குவதற்கென்று 1990-91 ஆண்டுககாக ரூ. 54.21 இலட்சம் ஒதுக்கப்பட்டுள்ளது.



EDITED AND PUBLISHED ON BEHALF OF THE T. T. DEVASTHANAMS BY K. SUBBA RAO, M.A. AND PRINTED AT T. T. D. PRESS BY M. VIJAYAKUMAR REDDY MANAGER, T. T. D. PRESS, TIRUPATI-517501.

